# அடுப்படி இராகங்கள்

கவிமாமணி இலந்தை சு இராமசாமி



சுந்தர் பதிப்பகம்
2 29வது தெரு , தில்லைகங்கா நகர், சென்னை-600061

BIBILIOGRAPHY

YEAR : *2021*



Name : Aduppadi Ragangal

Genre : Novel

Publisher : Sundar Pathippagam
2, 29TH Street
Thillai Ganga Nagar
CHENNAI- 600061

PRINTER : Real Impact Solutions
12, East Abhiramapuram
3rd Street, Mylapore
Chennai-600004

Pages: 130

Price: Rs: 150

## சமர்ப்பணம்

அடுப்படி தன்னில் வெந்தே
அல்லாடி, நன்றாய் எங்கள்
படிப்புக்கு வழிகள் செய்து
பண்புகள் தம்மை வாழ்வில்
கடைப்பிடித் திருந்த தந்தை
காலடி தன்னில் இந்த
அடுப்படி இராகங்கள் நூல்
அர்ப்பணம் செய்கின்றேன் நான்



சீவலப் பேரி அத்தான்
திருசுப்ர மணிய அய்யர்
ஆவலாய் சமையல் பற்றி
அனுபவப் பயிற்சி தந்தார்
மேவிய அவர்க்கும் அன்னார்
விழுமிய மனைவி என்றன்
ஆவிநேர் அக்கா வுக்கும்
அர்ப்பணம் செய்கின்றேன்
நான்



# முன்னுரை

## குருநாதன் ரமணி

என்ன மனுஷர் இவர்! *கவிமாமணி* என்ற பட்டம் தாங்கி, அறுசுவைகளில் மரபுகவிதைகள் சமைத்துப் பரிமாறுகிறார். அந்தப் பல்சுவை விருந்துகளில் காவிய, ஆன்மீகப் படையலும் செய்கிறார். உலகியல் சுவைகளில் *பஃபேயும்* தருகிறார்!

அறிவியல், இலக்கியம், சுதந்திரப் போராட்ட வரலாறு, வடமொழி-தமிழ் மொழியாக்கம், ஆங்கிலப் பாட்டியல் தமிழாக்கம், ஆங்கிலக் கவிதைகள் ஆகிய பல்வேறு துறைகளிலும் இவர் நளபாகம் ஆக்கிய நூல்கள் மூலம் இவரைப் பன்முக எழுத்தாளராகத் தமிழுலகம் அறிந்துள்ளது.

அறுசுவை விருந்தாக முன்பு *விண்ணோக்கிய வேர்கள்* என்னும் சிறுகதைத் தொகுப்பு தந்தார். இப்போது கல்யாண சமையல் விருந்தாக இந்த *அடுப்படி இராகங்கள்!*

கதையின் முக்கிய *பாத்திரம்* நளபாக நாயகர் சாம்பசிவம். அவரது சிஷ்யர்கள் ஒவ்வொருவரும் கல்யாண சமையலில் பயன்படும் பலவிதமான பாத்திரங்கள்! இவர்களுடன் கலந்துறவாடும் பாத்திரப் புரவலர்கள். கல்யாண சந்தடியில் காணாமற் போன மகனோர் பாத்திரம். அது உலகியல் வாழ்வுப் பட்டறையில் உருவும் தருமமும் மாறி வேறொரு வடிவில் திரும்ப வருகிறது!

கல்யாண சமையல் வேள்வியின் யஜமானர் நளபாக நாயகர் சாம்பசிவம். அதன் ஆகுதியாய் அவர் வாழ்க்கை.
அறுசுவைப் பணி அவர் வாழ்க்கை என்றால் நவரசங்களும் ததும்ப உறவாடி வாழ்வது அவர் குணம். எப்படி? கொஞ்சம் பார்ப்போம்.

* ஏலம், முந்திரி, பச்சைக் கற்பூரம் வெல்லம் சேர்ந்த கல்யாணப் பாயசத்தின் இனிமை போல் அவரது நேர்மையும், அன்பும் வாசகர் நினைவில் நிற்கும். அது அவரது பெருமிதம்.

* முந்திரியைத் திருடிய தன் சிஷ்யன் ஒருவனைத் தண்டிப்பதில் அவர் கோபம் தெரிகிறது.

* ஆயின் அது சிஷ்யன் மன்னிப்பு வேண்டக் கருணையாக வடிந்துவிடுகிறது.

* கால மாற்றத்தில் மற்ற பரிசாரர்கள் காஸ் அடுப்புக்கு மாறிவிட, இவர் இன்னமும் பழைய விறகுக் கோட்டை அடுப்பைச் சார்ந்திருக்கும் வெகுளியான மனிதர்.

* தன் மகன் வீட்டை விட்டு வெளியேறிக் காணாமற் போனதில் மனைவியின் அழுகையும் துயரமும் குறைவதற்காக அவர் மனத்துக்குள் மட்டும் அழுபவராகிறார்.

* அரசியல்வாதிகள் அவருக்குக் கசப்பும், இளிவரலும் (இழிவும்), அச்சமும் தருகின்றனர். அவர்கள் தொடர்பில் எதிர்த்து வேறொன்றும் செய்ய முடியாதவராய் அவர் மருளுகிறார்.

* தன் வாழ்வின் மேடு பள்ளங்களில் பயணிக்கும் போது செருக்கோ, வருத்தமோ கொள்ளாமல் அமைதி காக்கிறார்.

* இளவயதுக் காதலின் உவகையை இன்றும் மனத்துள் தேடித் திரிகிறார்.

* *பரோபகாரம் இதம் சரீரம்* என்ற வசனத்திற் கேற்ப அவர் வெள்ளத் துயரில் வாடும் ஏழைகளுக்குத் தன் கைக்காசைப் போட்டு அன்னதானம் செய்கிறார்.

* இவரது நேர்மையான வாழ்வில் இவர் சொன்ன அறிவுரைகளை ஒரு வெள்ளைக்காரர் (இவர் ஒரு முக்கியப் பாத்திரம்) குறிப்பெடுத்துக்கொண்டு பின்னர் நூலாகப் பதிப்பிக்கிறார்.

* இறுதியில் தன் மகளின் கல்யாணம் ஜாம்-ஜாம் என்று நல்ல மனம் கொண்டோர் உதவியுடன் நடைபெற அந்த வைபவத்தில் தன் மகனுடன் சேர்கிறார். புதிய உறவுகளையும் சம்பாதித்துக் கொள்கிறார்.

இவ்வாறு ஒவ்வொரு பாத்திரமும் அதன் சுவை நினைவுக்கு வருவதாக வாசகர் மனத்தில் நிற்கும் அளவுக்குக் கல்யாண சமையல் விருந்து பரிமாறும் கதாசிரியர் தானும் கதைக்குள் நுழைகிறார்!

இலந்தையார் தம் கதையமைப்பில் காட்டும் திறனையும் கல்யாணத்தில் முக்கியமாக விளங்கும் பட்சண சீர்வரிசையாக வருணித்து விடுகிறேன்.

* கல்யாணத்தில் அதிரசமும் முறுக்கும், திரட்டுப் பாலும் முக்கிய சீர்வரிசை பட்சணங்கள் என்பார்கள். இவரது தமிழ்

அதிரசமாகக் கவிதை கலந்து தித்திக்கிறது. திரட்டுப் பாலாகத் திரள்கிறது.

* கதையில் ஆங்காங்கே முறுக்கும் சுற்றுகிறார். குழல் பட்சணங்களும் பிழிகிறார். கதை அத்தியாயங்கள் சீர் முறுக்கு போல் பலவரிசைகளில் பரந்திருக்க, மனோகரப் பருப்புந் தேங்காய்க் கூம்புகளாக கதை நிகழ்வுகள் ஒன்றன்பின் ஒன்றாகக் குவிந்து, சொல்லும் பொருளும் உடையாமல் இணைந்து நிற்கின்றன.

* ஜாரணியில் தேய்க்கும் பூந்தித் துகள்களாகச் சொற்கள் வந்து விழுகின்றன. அவை காரா பூந்தியாகச் சாடுவதுடன், பூந்தி லாடுவாகத் திரண்டு பாரதியாரையும் வள்ளுவரையும் முன்னிறுத்துகின்றன.

* லட்டுவில் எட்டிப் பார்க்கும் முந்திரி, இலவங்கமாக கதாநாயகர் சாம்பசிவத்தின் அறிவுரைகள் அமைகின்றன.

* கட்டுப்பெட்டியாக அவர் மனைவி வீட்டில் முடங்கினாலும், குணத்தில் மைசூர்பாகு. மகள் தன் அழகிலும் குணத்திலும் ஜாங்கிரி.

* பலவிதக் கார வகைகள் கலந்த ஸ்பெஷல் மிக்ஸராக கதாநாயகர் வாழ்க்கை நிகழ்ச்சிகள்.

கதையின் முதல் அத்தியாயத்தில் தன்னை வாசகர் மனத்தில் நிலைநிறுத்திக் கொள்ளும் நளபாக நாயகர் சாம்பசிவத்தின் வாழ்க்கையை வருணிக்கும் இந்த நாவலில் ஆசிரியர் தம் முன்னுரையில் சொல்வதுபோல் சொந்த அனுபவத்தின் அடிப்படையில் கற்பனை கலந்து, மற்ற கதை மாந்தர்களும், கதை நிகழ்வுகளும் கண்முன் காட்சிகளாகச் சேர்த்துக் கதை இழைகளைப் பின்னிக் கவர்ச்சியாகவும், மரபு மாறாமலும் ஓர் பட்டுப் புடவையே நெய்துவிடுகிறார்.

எத்தனை சாம்பசிவங்களைக் கதையில் காட்டுகிறார் ஆசிரியர் இலந்தையார்!

* சமையல் கலை வித்தகர்

* சமையல் அறையில் கண்டிப்பே உருவானவர்

* களவு செய்தவனைத் தண்டித்து மன்னிப்பவர்

* தன் புரவலர்களைப் போற்றுபவராக இருந்தாலும், தன் மதிப்பை, மரபை விட்டுக் கொடுக்காதவர்

* அரசியல்வாதிகளின் கபடச் செயல்களில் சிக்குண்டு அல்லல் படுபவர்

* பரிசாரகர் சங்கத்திலும் வெறுப்பைச் சம்பாதிப்பவர்

* தம் மனைவி, மகளிடம் பாசமே உருவானவர்

* தம் தொழில் பட்டத்தால் மகளை உயர்ந்த இடத்தில் மணமுடிக்க இயலாது இருப்பவர்

* ஏழைகளுக்கு உணவும், கல்வியும் தந்து உதவக் கல்விச் சாலை நிறுவும் கனவுகள் கொண்டவர்

* இளவயதில் காதலித்த மங்கையை இன்றும் மனத்தளவில் நிறுத்தி வாழ்பவர்

பட்டா, கிட்டா, கோபால், ராஜு, சுப்பா, நாணா, சாமி என்று அவர் சிஷ்யர்கள் பட்டியல் நீள்கிறது. அவர்களில் கோபால் அவர் அன்புக்கும் குடும்பத்துக்கும் பாத்திரமாகிறான். கல்யாணச் சந்தடியில் வந்த வெள்ளைக்காரர் வில்லியம்ஸ், கதைப்போக்கில் அவரது பிரதம சீடராகிறார்.

இராமசேஷய்யர் என்ற புரவலர் இவருடன் முரண்பட்டு, இவரை அவமதித்துப் பின்னர் உதவுகிறார். தம் கணவர் டெபுடி கலெக்டர் என்ற ஹோதாவில் அவர் மகளுக்குத் தங்கை தன் மகனை மணம்செய்ய மறுக்கிறாள். பாரதியின்

கண்ணம்மா போல இவருக்கும் இளவயதில் ஒரு கண்ணம்மா வாய்த்தாலும் அந்தஸ்து காரணமாக அவளை மணம்செய்து கொள்ள இயலவில்லை. ஆனாலும் அவர்கள் உறவு மனத்தளவில் தொடர்கிறது.

இப்படிப் பல வகைகளிலும் ஒரு நல்ல, தீர்க்கமான கதையாகச் செல்கிறது இந்த நாவல். இதை ஒரு திரைப்படமாக எடுக்கும் அளவுக்குக் கதை நிகழ்வுகளும், வேறுபட்ட கதை மாந்தர்களும், ஆங்காங்கே வரும் முறுக்குகளும் (twists) அமைந்துள்ளன.

இந்த நாவலுக்கொரு முன்னுரை தரும் வாய்ப்பை எனக்களித்த இலந்தையாருக்கு என் நன்றிகள். தமிழ்ப் புனைகதை உலகில் தனக்கென்றோர் இடம் பிடித்துப் பலர் படித்துப் பாராட்டும் நாவலாக இது விளங்கும் என்பதில் எனக்கு ஐயமில்லை.

அன்பன்

குருநாதன் ரமணி
(புனைகதை, கவிதை எழுத்தாளன்)
12 மார்ச் 2021
சென்னை 600064

# என்னுரை

என்தந்தை மதுரையில் மிகவும் புகழ்பெற்ற சமையல்காரராக விளங்கினார். அவரின் கீழ் பலர் பணி புரிந்தார்கள். அவரைத்தான் பலர் திருமணங்களுக்கும் வேறு விசேஷங்களுக்கும் சமையலுக்கு அழைப்பார்கள். கோயில் திருவிழாக்கள், திருமணங்கள் எனப்பல நிகழ்ச்சிகள் அவரது சமையலால் சிறப்புப் பெற்றன. அதே போல என்னுடைய பெரிய தமைக்கை திருமதி செல்லம்மாளின் கணவர், எனது அத்தான் அமரர் சீவலப்பேரி சுப்பிரமணிய அய்யர் அவர்களும் திருநெல்வேலிப் பகுதியில் சமையலில் பிரசித்தம். அவரிடமும் பலர் பணி புரிந்தனர். நான் தூத்துக்குடியில்  கல்லூரியில் படித்துக்கொண்டிருந்த போது விடுமுறையில் அவரது வீட்டிற்குச் சென்று தங்குவதுண்டு. அப்பொழுது அவர் செல்லும் சமையல் வேலைகள் சிலவற்றிற்கு நானும் சென்றிருக்கிறேன். அவர் மற்றவர்களை வேலைவாங்கும் நேர்த்தியைக் கண்டு வியந்திருக்கிறேன். சில நுணுக்கங்களைக் கற்றிருக்கிறேன்.

தனிக்குடித்தனமும் வேலை செய்யும் மனைவியும் உள்ளவர்கள் பெரும்பாலும்  சமையல் தெரிந்தவர்களாக இருப்பார்கள். அவசியம் நேரும் போது கற்றுக் கொண்டுதானே ஆகவேண்டும். நான் 10 ஆண்டுகள் வெளியூரிலும் வெளிநாட்டிலும் பணி புரிய நேர்ந்த போது நானே சொந்தமாகச் சமையல் செய்துதான் சாப்பிட்டேன். சமையலில் பல சோதனைகள் செய்து பார்த்திருக்கிறேன். வெளிநாட்டில் இருந்த போது பல பெண்கள் என்னிடம் சமையல் குறிப்புகள் கேட்பதுண்டு.

சமையல் தெரிந்தவருக்கு மனைவியாக இருப்பது மிகவும் சிரமம் என்று என் மனைவி என்னிடம் சொல்வதுண்டு. அதற்கு வேறொரு காரணமும் உண்டு. அவள் வீட்டில் இருக்கும் போது சிலர் என்னிடம் வந்து சமையல் குறிப்பு கேட்பதுண்டு. எரிச்சல் வரத்தானே செய்யும்.

எனவே என்னுடைய அனுபவத்தின் அடிப்படையில் எழுந்ததுதான் இந்தப் புதினம். கதையில் என் பெயர்கூட ஓரிரு இடங்களில் வரும். கவிஞனாக இருக்கிற காரணத்தால் ஒரு கவிஞரையும் ஒரு கதாபாத்திரமாக இப்புதினத்தில் உருவாக்கியிருக்கிறேன்

அரசியல் வாதிகளிடம் அகப்பட்டு அல்லல் பட்ட சமையற்காரர்களின் கதையும் கொஞ்சம் தெரியும். அதையும் இந்தக் கதையில் கொணர்ந்திருக்கிறேன். இந்தக் கதையை மேலும் விரிவு படுத்த வாய்ப்புகள் இருக்கின்றன. பாகம் இரண்டு வந்தாலும் வரும். இந்த நூலுக்கு மிக அருமையாக முன்னுரை அளித்துள்ள கவிஞர், பாவலர் , சிறுகதை ஆசிரியர் திரு . இரமணி அவர்களுக்கு என் நன்றி

இந்நூலை வெளிக்கொணர உதவிய அனைவருக்கும் என் நன்றி!

அன்புடன்,
இலந்தை சு இராமசாமி

# பொருளடக்கம்

# அடுப்படி இராகங்கள்

அத்தியாயம் 1

## சமரசம் செய்த சமையற்காரர்

கோபாலா, எவ்வளவு நேரந்தாண்டா அரைச்சிண்டிருப்பே?'' என்று கேட்டார் சாம்பசிவம்
“இதோ முடிஞ்சுபோச்சு மாமா'' என்றான் கோபால்
“என்னடா முடிஞ்சு போச்சு, பருப்பு ஒண்ணும் இரண்டுமா இன்னும் கொட்டை கொட்டையா முழிச்சிண்டிருக்கே''

“இதோ முடிச்சிடறேன் மாமா'' என்றான் கோபால்
“ஏண்டா கோபாலா, நீ இப்படி மசமசன்னு இருக்கமாட்டியே, இன்னிக்கி என்னடா வந்தது உனக்கு?
“ஒண்ணுமில்லே மாமா''
“என்னடா ஒண்ணுமில்லே'' என்று இரைந்தார் சாம்பசிவம்
“அது... மாமா.... நேத்துத் தோட்டத்திலே மண்தோண்டின போது கையிலே ஒரு முள் தைச்சிடுத்து''
“முள்ளை இன்னும் எடுக்கலியா?''
“இல்லே மாமா, ரொம்ப ஆழமாப் பாஞ்சிருக்கு''
“அந்தக் கையோடே குழவியைப் பிடிச்சியானா இன்னும் ஆழமாப் போயிடுமேடா! இதை ஏன் எங்கிட்ட முதலிலேயே சொல்லலே?''
“மாமா வந்து.''
“என்னடா வந்து. அதை அப்படியே வச்சிட்டுக் கையை அலம்பிண்டு வா!''
''மெதுவா முடிச்சுடறேன் மாமா''
''வாடான்னா ''
கோபால் எழுந்து கையைக் கழுவிக்கொண்டு வந்தான்.
“காட்டு, கையை'' கையை நீட்டிக் காட்டினான்
பைக்குள்ளிருந்து முள்வாங்கியை எடுத்து மெதுவாக முள்ளை எடுத்தார். இரத்தம் கசிந்தது..
“டே பட்டா அங்கேருந்து கொஞ்சம் மஞ்சள் பொடியைத் தண்ணீரிலே கெட்டிமாக் கரைச்சுக்கொண்டா''

பட்டா கொணர்ந்த மஞ்சள் பொடியை வாங்கி, பிடித் துணியியிலிருந்து ஒரு வாலம் கிழித்து மஞ்சள் பொடியை முள்குத்திய காயத்தின்மீது வைத்துக் கட்டினார்.
''கோபால் போய் ரெஸ்ட் எடுத்துக்கோ'' என்றார் சாம்பசிவம்.
“மாமா, நான் குறையும் அரைச்சு முடிச்சுடறேன்”
“போடான்னா...”
வலது கையிலே ஒண்ணுமில்லை மாமா”
“ஒரு மணி நேரம் கழிச்சு ஸ்டோர் ரூமிலிருந்து சாமான் வாங்கிக் கொடுக்கிற வேலையை மட்டும் நீ பாரு.”
“அரைக்கிறது...”
“எனக்குத் தெரியும், நீ போ”
அவருடைய வாய்க்குப் பயந்து கோபால் ஒரு மூலையில் போய் அமர்ந்துகொண்டான். சாம்பசிவம் எழுந்தார்.
ஆட்டுக்கல் பக்கம் போய் உட்கார்ந்து தானே அரைக்கத் தொடங்கினார்..
“டே, பட்டா, சாதத்துக்கு எஸ்ஸர் போட்டிருக்கியா? “என்று அரைத்துக் கொண்டே குரல் கொடுத்தார்.
“போட்டிருக்கேன், மா”
“வேலைக்காரி, அரிசி புடைச்சாளா?”
“பொடச்சிட்டா மாமா”
“அதிலே பத்துப்படி அளந்துண்டு வா. தலை தட்டி அளந்துண்டு வாடா, கிட்டா நீ போய் பாயசத்துக்கு முந்திரி வாங்கிண்டு வா. ஒண்ணு வாயிலே போட்டேன்னாலும் கொன்னுடுவேன்... யாருடா வெறகு வாங்கினா? மொந்தை மொந்தையாக் கொடுத்திருக்கானே! டே, மணி, அந்தக் கோட்டை அடுப்பிலே குட்டி வார்ப்பைத் தூக்கிப் போடுடா. ரசத்துக்குத் தாளிச்சுக் கொட்டு”
அவருடைய கையும் அசைந்துகொண்டிருந்தது, வாயும் அசைந்து கொண்டிருந்தது.
“மாமா, உங்களைப் பொண்ணோட அப்பா கூட்டிண்டுவரச் சொன்னார்.” என்று ஒரு சிறு பையன் வந்து அழைத்தான்.
“டே அம்பி, இந்த ஆட்டுக்கல்லிலே இருக்கறதை வழிச்சு எடுத்து ஒரு வாளியிலே போடு. வாளியிலே ஈயமிருக்கா பாரு. சாம்பாரிலே ஒரு கொதி வந்ததும் இதை அதிலே கரைச்சுக் கொட்டு. அப்படியே கொட்டிடப் போறே!”

மொத்து மொத்துண்ணு உண்டை உண்டையா மிதக்கும். நான் போயிட்டு இதோ வந்துடறேன். வரிசையாக உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டே எழுந்து சென்றார். செல்லும் போதே,
“கிட்டா, போய் இரண்டு மீட்டர் வடிகட்டற கோணி வாங்கி வச்சுக்கோ” என்று சொல்லிக் கொண்டே சென்றார்.
“அம்பி உனக்குத் தெரியுமோ, முந்தாநாள் மாமா ஆத்துச் சுவரிலே ஆணி அடிக்கறபோது சுத்தியல் பட்டு அவருக்குக் கையிலே காயம். அதோடதான் ஆட்டுக் கல்லிலே அரைச்சார். எப்படித்தான் வலியைப் பொறுத்துக் கொண்டாரோ?” என்றான் பட்டா
“மாமா சத்தம் போட்டாலும் அவருக்குத் தங்கமான மனசுடா” என்றான் அம்பி
இதைக் கேட்டுக் கொண்டிருந்த கோபாலின் கண்கள் பனித்தன. “என் கை வலிக்கும் என்று தன் கை வலிக்க அரைத்தாரே” என்று எண்ணிய போது அழுகையே வந்துவிட்டது. பெண்ணின் தந்தையும் சாம்பசிவமும் பேசிக்கொண்டே உள்ளே நுழைந்தனர்.
“மாமா, உங்களுக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரியலே. ஒரு நிமிஷத்திலே அவாளை எப்படி மாத்திப்பிட்டேள்! “என்று வியந்தார் பெண்ணின் தந்தை
“இப்போ கலாட்டா பண்ணினாரே உங்க சம்பந்தியோட மூத்த மாப்பிள்ளை, அவரை எனக்கு ஏற்கனவே தெரியும். அவருக்கு முன்னாலே உதவி பண்ணியிருக்கேன். அதனாலே நான் சொன்னதும் அடங்கிட்டார்” என்றார் சாம்பசிவம்.
“உங்க உதவிக்கு நான் என்ன கைமாறு செய்யப் போறேன்”
“அதெல்லாம் ஒண்ணும் செய்ய வேண்டாம். அதோ கையிலே கட்டுப் போட்டுண்டு ஒக்காந்திருக்கானே ஒரு பையன். அவனைப் பாருங்கோ. அவன் பி எஸ் சி படிக்கிறான். ரொம்ப சூட்டிக்கையான பையன். அம்மா மட்டும் இருக்கா. ரொம்பக் கஷ்ட ஜீவனம். அதனாலே லீவு நாளிலே இந்த வேலைக்கு வருவான். அவன் படிப்பு முடிஞ்சதும் உங்ககிட்ட அனுப்புறேன். உங்க கம்பெனிலே ஒரு வேலை போட்டுக் கொடுங்கோ” ”நிச்சயமாச்

செய்யறேன். இப்பவே வேணுமின்னாலும் அனுப்புங்கோ. பார்ட் டைமா வேலை செய்யட்டும்''

''வேண்டாம். பையன் கிராஜுவேட் ஆகட்டும். அப்புறம் கொடுங்கோ. அது போதும்''
பெண்ணின் தந்தை உள்ளே போன பிறகு மறுபடியும் உத்தரவுகள் பறந்தன. .
''அம்பி, அரிசியைக் களைஞ்சு கொண்டுவா. கிட்டா முந்திரிப்பருப்பு வாங்கிண்டு வந்தியா. அதோ பாரு விறகு வெளியிலே எரியுது. என்னடா பிரயோஜனம். உள்ளே தள்ளுடா! பட்டா உருளைக் கிழங்குக் கறியை. அந்த வாணலியை இறக்கிக் கொஞ்சம் தணலைக் கீழே போட்டு அதுமேலே எடுத்துவை. அந்தச் சூட்டிலேயே அது காயட்டும். டே, நாணா வடைக்கு ஊறப்போட்டுட்டியா?''
மேலும் மேலும் உத்தரவுகள் பறந்தன. அவரிடம் பணிபுரியும் அனைவரும் பம்பரமாகச் சுழன்றார்கள்.
ஆட்கள்தாம் பறந்தார்கள் என்றால் அடுப்புக் கூடவா பயப்படும். தீக்கொழுந்துகள் படபட சட என உயர்ந்தும் தாழ்ந்தும் சிவந்தன.
''கிஸ்மிஸ் எங்கேடா நாணா?''
இதோ இருக்கு மாமா?''
''இவ்வளவு எதுக்குடா?''
''பாயசத்துக்கு''
''அவ்வளையும் போடாதே, பாயசம் புளிச்சுப் போகும். பாதியை எடுத்து வச்சிடு. லட்டுப் பண்ற போது போட்டுக்கலாம்.''
''சரி, மாமா''
''கோபாலா, கை எப்படிடா இருக்கு?
''பரவாயிலே மாமா''
''சரி, ஸ்டோர் ரூம்லே போய் இலைக்கட்டை எடுத்துண்டு வந்து நறுக்கிவை. சாப்பாட்டு இலை, டிபன் இலை, ஏடு எல்லாம் தனித்தனியாக் கட்டிவை.''
சம்பந்திகளைக் கவனித்துக்கொண்டிருந்த ராஜு வந்தான்.
''மாமா, மாப்பிள்ளையோட மாமா இன்னிக்குச் சாயங்கால டிபனுக்கு என்ன ஸ்வீட்டுன்னு கேட்டுண்டு வரச் சொன்னார்.''

“சாம்பாக்’னு சொல்லு.
சாம்பசிவத்துக்குத் துணையாக வந்தவர்களில் சுப்பா என்ற சுப்பிரமணிய அய்யர் சற்று வயது கூடியவர்.
சாம்பசிவத்திடம் சற்றுத் தைரியமாகப் பேசக் கூடியவர்.
அவர்” சாம்பாக்”னா என்ன? பேர் புதுசா இருக்கே” என்று கேட்டார்.
சாம்பசிவம் சிரித்தார்.
“சுப்பா, எதையாவது புதுசாக் கண்டு பிடிக்கிறவா, தான் கண்டுபிடிச்சதுக்குத் தன்பேரை வைப்பாளாம். அது மாதிரி நான் புதுவகையாச் செய்யற ஸ்வீட்டிலே என் பேர் வருகிற மாதிரி “சாம்பாக்” என்று பேர் கொடுத்தேன். எப்படி?”
எல்லோரும் சிரித்தார்கள்
“நீங்க பெரிய ஆளு மாமா. வாழைக்குருத்தையே சமையல் செஞ்சவராச்சே நீங்க” என்றார் சுப்பா.
“அது என்ன கதை மாமா.” என்றான் பட்டா
“அதெல்லாம் அப்புறம் பேசலாம். இப்போ வேலையைப் பாருங்கோ” என்றார் சாம்பசிவம்.
“இலையைப் போடலாமா?” என்று கேட்டார் பெண்ணுக்கு மாமா
“போடலாம், போடலாம், எல்லாம் ரெடி. அம்பி, அப்பளாம் பொரி. சீனு நீ வடையைத் தட்டு. . மத்தவாள்ளாம் பரிமாறப்போங்கோ. .. கோபாலா , நீ எங்கேடா போறே! இங்கேருந்து சாமான்களைப் பாத்திரத்திலே எடுத்துவை. நாணா நெய்யை உருக்கி வச்சிருக்கா பாரு. டேய், பச்சடிக் கரண்டியை ரசத்திலே போடாதே. வெந்நீர் எடுத்து வச்சுக்கோ. யாராவது வயசானவா வெந்நீர் கேப்பா. சாம்பாரும் ரசமும் ரெண்டு ரெண்டு வாளிலே எடுத்துக்கோங்கோ”
“கிட்டா, சிரட்டை ஆப்பையை சாம்பார் பரிமாற வச்சுக்கோ. பரிமாறப் போகிறதுக்கு முன்னாடி எல்லாரும் உடம்பைச் சுத்தமா தொடச்சுண்டு போங்கோ. யாரும் மசமசன்னு நிக்கப்படாது.
ஒவ்வொருவரும் பறந்தார்கள்
அன்று அந்தச் சாப்பாட்டுச் சுவையில் அந்தக் கல்யாணத்தின் மதிப்பு ஒருபடி உயர்ந்தது.

அத்தியாயம் 2

# தவறு செய்தால் தண்டணை கிடைக்கும்

பட்டா, கிட்டா, கோபால், ராஜு, சுப்பா, நாணா , சாமி என்று அவரிடம் சமையல் வேலை செய்யும் பலரும் சாம்பசிவத்தின் வீட்டு வாசல் திண்ணையில் அமர்ந்திருந்தார்கள். எல்லோருடைய முகத்திலும் கேள்விக்குறி. வழக்கமாகக் கல்யாண விசேஷங்கள் முடிந்தவுடனேயே அங்கேயே சம்பளப் பட்டுவாடா செய்துவிடுவார் சாம்பசிவம். அந்த முறை தன்வீட்டுக்கு எல்லோரையும் வரச் சொல்லிவிட்டார். ஏன் என்று எவருக்கும் தெரியவில்லை.

“ஒரு வேளை கல்யாண வீட்டுக்காரர் கணக்குத் தீர்க்கவில்லையோ” என்று கேட்டார் பட்டா.

“அவா கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும் நம்ம சம்பளத்தைத் தன் கையிலேருந்து போட்டாவது மாமா கொடுத்துவிடுவார். இந்தத் தடவை மட்டும் ஏன் ஆத்துக்கு வரச் சொன்னார்?” என்று குழப்படைந்தவரைப் போல் கேட்டார் சுப்பா

“எல்லாரும் சும்மா இருங்கோ. மாமா எதைச் செஞ்சாலும் அதுக்கொரு காரணம் இருக்கும். “என்றான் கோபால்.

“அதுசரி, வழக்கமா கல்யாணப் பொண்ணுக்கு 11 ரூபாய் ஆசீர்வாதம் பண்ணுவார். ஆனால் இந்தத் தடவை 151 ரூபாய் ஆசீர்வாதம் பண்ணினார். அதுதான் ஏன்னு புரியலே!” என்றான் ராஜு.

“பொண்ணாத்துக்காரா ரொம்ப வேண்டியவாளோ என்னமோ “என்று சொன்னான் சாமி

“அதெல்லாம் ஒண்ணுமில்லே. நம்ம மைலாப்பூர் பப்புவைவிட இவர் ரொம்ப வேண்டியவரோ? அவர் பொண்ணுக்கே 11 ரூபாய் தானே ஆசீர்வாதம் பண்ணினார்.” என்றார் சீனு.

“இன்னொண்ணு கவனிச்சேளா, மாமா தானே நேரிலே போய் ஆசிர்வாதம் பண்ணுவார். இந்தத் தடவை நம்ம

கிட்டா கையிலே கொடுத்தனுப்பிச்சுக் கையிலே கொடுக்கச் சொன்னார்.'' என்றான் பட்டா
''என்னவோப்பா, எல்லாம் புதிரா இருக்கு'' என இழுத்தார் சுப்பா.
அதுவரை வாயாடிக் கொண்டிருந்த திண்ணை திடீரென மௌனம் சாதித்தது.
சமையல் சாம்பசிவம் அங்கே பிரசன்னமானார். கையிலே பல உறைகளை வைத்திருந்தார். ஒவ்வொரு உறையையும் பெயரைச் சரிபார்த்து அவரவர்கள் கையில் கொடுத்தார். கிட்டாவுக்கு மட்டும் கொடுக்கவில்லை.
''மாமா அஞ்சு ரூபா கூட இருக்கே!'' என்றான் கோபால்
''வச்சுக்கோ. எல்லோருக்கும் அஞ்சு ரூபா கூடக் கொடுத்திருக்கேன். ''என்றார் சாம்பசிவம்.
சாம்பசிவத்தின் மனைவி பார்வதி எல்லோருக்கும் காபி கொடுத்தாள். எல்லோருக்கும் எவர் சில்வர் டம்ளரில் காபி கொடுத்த மாமி ஏனோ கிட்டாவுக்கு மட்டும் பித்தளை டம்ளரில் காபி கொடுத்தாள்.
''சுப்பா, இதைக் கிட்டா கையிலே கொடு'' என்று ஒரு கவரைச் சுப்பிரமணியத்தின் கையில் கொடுத்தார். சாம்பு. கிட்டா வாங்கிப் பார்த்தான். உள்ளே ஐந்து ரூபாய் மட்டும் இருந்தது. அவனுக்குப் புரிந்து போயிற்று. உடனே நெடுஞ்சாண் கிடையாக சாம்பசிவத்தின் காலில் விழுந்தான்.
''மாமா, என்னை மன்னிச்சிடுங்கோ மாமா. நான் செஞ்சது தப்புத்தான். இனிமேல் இப்படிச் செய்யமாட்டேன் மாமா!'' என்று அவருடைய காலைப் பிடித்துக்கொண்டு கதறினான். .
''சுப்பா, அவனை எழுந்திருக்கச் சொல்லு.'' சாம்பசிவத்தின் குரல் எந்தப் பதட்டமும் இல்லாமல் வந்தது.
''சுப்பா, அவன் எவ்வளவு எடுத்தான்னு கேளு.''
''அரை கிலோ இருக்கும் மாமா'' அழுதுகொண்டே சொன்னான் கிட்டா.
''இந்தக்காலத்திலே பொண்ணுக்குக் கல்யாணம் பண்றவன் வயத்தைக் கட்டி வாயைக் கட்டி, வீட்டை வித்து, வயலை வித்து எவ்வளவோ கஷ்டப்படறான். அப்படிக் கஷ்டப்பட்டு வாங்கின முந்திரிப் பருப்பிலே அரைகிலோ எடுத்து இவன் ஒளிச்சு வச்சிண்டான். எனக்குத் தெரியாதுன்னு நெனச்சிட்டான். இந்தச் சாம்பன் கண்ணிலிருந்து எதுவும்

தப்ப முடியாதுன்னு இவனுக்குத் தெரியலே!. கல்யாண வீட்டிலேயே இவன் குட்டை உடைச்சிருந்தா நம்ம மானமும் அவன் மானமும் போயிருக்கும். அதனாலேதான் உங்களையெல்லாம் இங்கே வரச் சொன்னேன்.''
“பூனை மாதிரி இருந்துண்டு இந்த வேலை பண்ணியிருக்கானே'' என்று ஆத்திரத்தோடு சொன்னார் சுப்பா.
“கல்யாண வீட்டுக்காரருக்கு நஷ்டம் வரப்படாதேன்னுதான் பொண்ணுக்கு ஆசீர்வாதம் பண்ணும் போது அந்த முந்திரிப் பருப்பு விலையையும் சேர்த்தே 151 ரூபாய் கொடுத்தேன். அதையும் கிட்டா கையிலேயே கொடுத்துக் கொடுக்கச் சொன்னேன். “என்றார் சாம்பசிவம்.
“முந்திரிப் பருப்பில்லாம எப்படி சமாளிச்சேள்.'' என்று கேட்டான் பட்டா.
'' எப்படியோ சமாளிச்சிட்டேன்.''
“மாமா அவனை அங்கே ஒண்ணும் செய்யாமல் எங்கள் மானத்தைக் காப்பாத்தினேள். இல்லைன்னா சாம்பசிவம் ஆட்களே களவாணிப் பசங்கன்னு சொல்லியிருப்பார்கள்.'' ஆதங்கத்தோடு சொன்னார் சுப்பா.
“அந்த முந்திரிப்பருப்பு விலையைக் கிட்டா சம்பளத்திலிருந்து பிடிச்சுட்டேன். அவனுக்குக் கொடுக்கவேண்டியது ஒண்ணுமில்லே. சும்மா போகச் சொல்லக் கூடாதேன்னுதான் அஞ்சு ரூபாய் கொடுத்திருக்கேன். அவனுக்கு அஞ்சு ரூபாய் அதிகம் கொடுத்ததாலே எல்லாருக்கும் அஞ்சு ரூபாய் அதிகம் கொடுத்திருக்கேன்'' என்றார் சாம்ப சிவம்.
“மாமா, எங்களுக்காக இந்தத் தடவை கிட்டாவை மன்னிச்சிடுங்க மாமா'' என்று கெஞ்சினான் பட்டா.
“இவனையெல்லாம் வேலைக்குச் சேத்துண்டா நம்ம மானம் மரியாதையெல்லாம் போயிடும்'' என்று இரைந்தார் சுப்பா.
“மாமா, நான் செஞ்சது தப்புத்தான். நீங்க என்னைத் திட்டுங்கோ, அடியுங்கோ, வேலைக்கு வராதேடா பயலேன்னு சொல்லிடுங்கோ. ஆனா எங்கிட்டே பேசாம மாத்திரம் இருந்திடாதேங்கோ'' என்று அழுதுகொண்டே சொன்னான் கிட்டா.

“கோபால், நீ படிச்சவன். இவனுக்கு என்ன தண்டனை கொடுக்கலாமின்னு சொல்லு” என்றார் சாம்பசிவம்
“வயதில் சிறியவனான தன்னைப் பார்த்து இப்படிச் சொன்னதும் கோபால் சற்று நெளிந்தான். பிறகு,
“மாமா, பரீக்ஷை எழுதறபோது யாராவது திருட்டுத் தனம் பண்ணினா அவாளை ரெண்டு வருஷம், மூணு வருஷம் பரீக்ஷை எழுதக்கூடாதுண்ணு சொல்லிடுவா. நம்ம கிட்டா செஞ்சது தப்புத்தான். அவரும் உணர்ந்துட்டார். அவருக்குத் தண்டனையா அடுத்த வேலைக்கு மட்டும் அவரைச் சேர்த்துக்க வேண்டாம்.” என்றான் கோபால்.
“அதுதான் சரி “என்றான் பட்டா
“சரி, வர்ற வெள்ளிக்கிழமை ஸ்ரீபுரம் சீதாராமய்யர் ஆத்துக் கல்யாணம். வியாழக்கிழமை எல்லாரும் வந்துருங்கோ. கிட்டா வரவேண்டாம்.” என்று சொல்லிக்கொண்டே சாம்பசிவம் உள்ளே சென்றார்.
கிட்டா தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டே அந்த இடத்தை விட்டு வெளியேறினான்.

அத்தியாயம் 3

# சமைக்கத் தெரியாத சமையல் வல்லுநர்

”என்னம்மா பாரு, தலையை ரொம்ப வலிக்குதா? மாத்திரை வாங்கிண்டு வரட்டுமா?” என்று பரிவோடு மனைவியைக் கேட்டார் சாம்பசிவம்.
அவருக்குத் திருமணம் ஆகி முப்பது வருடங்கள் ஆகிவிட்டன. நோய் நொடி என்று அவர் மனைவி படுத்தது இல்லை. எப்பொழுதாவது சின்னச் சின்னத் தலைவலி வரும். அவள் துடிக்கிறாளோ இல்லையோ சாம்பசிவம் துடித்துப் போவார்
“பாரு, அமிர்தாஞ்சனம் தேச்சு விடட்டுமா? எங்கே போய் இப்படித் தலைவலியை இழுத்துண்டு வந்தே?”
“ஏன்னா இப்படிப் பதட்டப்படறேள்? நேத்துக் கடையிலேருந்து சாமான் வாங்கிண்டு வர்றபோது நல்ல மழை. கொஞ்சம் நனைஞ்சு போயிட்டேன். சிவன் கோவில் மண்டபத்திலே தங்கிட்டு மழை விட்டதுக்கப்புறம் வந்தேன். நனைஞ்சது ஒத்துக்கலை. ஜலதோஷம், தலைவலி வந்துடுத்து. “
“நீ செஞ்சது தப்பு. எங்கப்பா அந்தக் காலத்துலே சொல்லுவார்” மழையிலே நனைஞ்சா முழுக்க நனைஞ்சிடணும். கொஞ்சம் நனைஞ்சு, கொஞ்சம் ஒதுங்கி அப்புறம் நனைஞ்சு வந்தா ஜலதோஷம் வரும். முழுக்க நனைஞ்சா ஒண்ணும் ஆகாது . நான் அப்படித்தான் செய்யறேன். முழுக்க நனைஞ்சிடுவேன்.”
“நீங்க ஆம்பிளை. முழுக்க நனையலாம். பொம்மனாட்டிகள் அப்படி நனைய முடியுமா? நாங்கள் முழுக்க நனைஞ்சிண்டு ஒடம்போட ஒட்டின புடவையோடே நடந்தா எங்களை வேடிக்கை பார்ப்பா. பொம்பனாட்டிகள் கஷ்டம் உங்களுக்கு எங்கே புரியப்போகுது.”””
”நீ சொல்றதும் சரிதான். அடே டே, ஜுரம்கூட அடிக்குது போலிருக்கே! கொஞ்சம் இரு. உனக்குக் கஞ்சி போட்டுண்டு வரேன்”
“ஏன்னா, உங்களுக்கும் கஷ்டம்?”

“நன்னாச் சொன்னே போ. எவ்வளவோ சமையல் பண்றேன். எனக்குக் கஞ்சி போடறதா கஷ்டம். இரு, இரு. இதோ வரேன்”

கஞ்சி போடுவது ஒன்றும் அவ்வளவு எளிதான காரியமாக இல்லை. கோட்டை அடிப்பிலே சமையல் செய்யத் தெரிந்தவருக்கு மண்ணெண்ணை அடுப்பிலே சமையல் செய்யத் தெரியவில்லை. மண்ணெணை அடுப்புப் புகை கண்ணைக் கரிக்க ஒருவழியாகக் கஞ்சி போட்டுக் கொண்டு வந்தார். அதை இரண்டு டம்ளர்களில் எடுத்து ஆற்றினார். ஆற்றுகிற போதே கஞ்சியில் புகையடித்திருப்பதை மூக்குச் சொன்னது. பார்வதியிடம் கஞ்சியை நீட்டினார். வாங்கிக் கொஞ்சம் வாயில் விட்டாள். அவசர அவசரமாக எழுந்து வெளியிலே போய்க் கஞ்சியைத் துப்பினாள்.

“என்னன்னா, கஞ்சியிலே உப்பை அள்ளிப் போட்டிருக்கேளே?”

“பாரு, இருபதினாயிரம் பேருக்குக்கானாலும் சமைப்பேண்டி. உப்புக்காரம் சரியா இருக்கும். நான் சமையல் செய்யற இடத்திலே வேறு யாரையும் உப்புக் காரம் போட விடறதில்லை. ஆனால் ஒருத்தர் ரெண்டு பேருக்கு என்னாலே சமையல் செய்யத் தெரியலேடி. எனக்குக் கத்துத் தரியா?” என்று குழைந்தார் சாம்பசிவம். கணவனின் அன்பில் மனைவியின் தலைவலி கரைந்துகொண்டிருந்தது.

“கவலைப் படாதீங்கோ. இன்னும் ஒருமணியிலே ரமா காலேஜிலிருந்து வந்துடுவா. அவளைக் கஞ்சிபோட்டுத் தரச் சொல்லறேன். ஏன்னா, நீங்க சமையல் பண்ற ஒரு கல்யாணத்துக்குக் கூட என்னைக் கூட்டிட்டுண்டு போகமாட்டீங்கிறேளே! கல்யாணம் நடத்தறவாளெல்லாம் என்னையும் வரச்சொல்லிக் கூப்பிடறா தெரியுமோ?” என்று கேட்டாள் பார்வதி

“பாரு, கல்யாண வீட்டிலே நாங்க என்னவெல்லாமோ பண்ணுவோம். தப்பா நினைக்காதே.. ஒரு அவசரத்திலே சாப்பிட்ட இலையைக் கூட நான் எடுத்துப் போடறதுண்டு. நீ அதைப் பார்த்தா கஷ்டப்படுவே. அது மட்டுமில்லே. உன்னை ஒரு சமையல்காரன் பெண்டாட்டின்னு மதிப்புக்

கொடுக்காம யாராவது பேசினா என்னாலே பொறுக்க முடியாது. இது எல்லாத்துக்கும் மேலே இன்னொரு பெரிய காரணம் இருக்கு. நான் சமையல் பண்ற இடத்திலெல்லாம் சாப்பிடறதில்லை. . கொஞ்சம் மோரைக் குடிச்சே ஒப்பேத்திடுவேன். வேலை முடிஞ்சதும் உன்கைச் சாப்பாட்டிற்கு ஓடிவந்துவிடுவேன். அப்போ இங்கே சமையல் செஞ்சு வைக்க நீயிருக்க வேண்டாமா?''
“நீங்க சமையல் பண்றதை நீங்க சாப்பிட்டாத் தானே உங்கள் சாப்பாட்டுமேலே நம்பிக்கைவரும்?''
“அப்படியில்லை. கல்யாணச் சமையலிலெல்லாம் வாய்க்கு ருசியாப்பண்ணச் சொல்றாளே தவிர உடம்புக்கு ஆரோக்கியமாக இருக்கணும்னு யாரும் சொல்றதில்லை. வாய்க்கு ருசியா முடிஞ்சவரை உடம்பைக் கெடுக்காதபடிதான் சமைக்கிறோம். அதை அடிக்கடி சாப்பிட்டா தொந்திதான் பெருக்கும். அதனாலேதான் அங்கே சாப்பிடறதில்லை.''
“நீங்க சொல்றது சரிதான். நான் ஒண்ணு கேப்பேன். கோவிச்சுக்க மாட்டீங்களே?''
“நிச்சயமா மாட்டேன். என்ன சொல்லு''
“நான் போயிட்டா அப்புறம் நீங்க என்ன பண்ணுவேள்?''
சட்டென்று அவளது வாயைப் பொத்தினார். அப்படியெல்லாம் பேசக்கூடாது என்று அதட்டினார். அவர் கண்கள் பனித்தன.
“பூவோடும் பொட்டோடும் போறதுதானேன்னா ஒரு சுமங்கலிக்கு அழகு. உங்களுக்கு முன்னாடி நான் போயிடணும்''
“பாரு, நீ போயிட்டா எனக்கு யாருடி சாப்பாடு போடுவா? ஒண்ணு சொல்றேன் கேட்டுக்கோ. நீ பூவோடும் பொட்டோடும் போக உனக்கு அனுமதி தரேன். உன் ஆசையைக் கெடுக்கக் கூடாதில்லையா? ஆனால் ஒரு கண்டிஷன். நான் போறதுக்கு ஒரு நிமிஷத்துக்கு முன்னாடி நீ போ'' என்றார் சாம்பசிவம்.
சாம்பசிவத்தின் அன்பில் அவள் உருகிப்போனாள். அங்கே ஓரிரு நிமிடங்கள் பேச்சே இல்லை.
“ஏன்னா, இன்னொரு விஷயம் தெரியுமோ, இன்னிக்குக் காலம்பர கிட்டா எதிர்த்தாத்து சாஸ்திரிகளைப் பார்க்க

வந்தானாம். நாளைக்கு அவனுடைய அப்பாவுக்கு சிரார்த்தமாம். ஆனால் பணம் இல்லாததனாலே இரண்யமாப் பண்ணிடலாம்னு சொன்னானாம்''
"உனக்கு யார் சொன்னா?"
"சாஸ்த்திரிகளாத்து மாமி சொன்னா"
"சரி, நீ படுத்துக்கோ. நான் சாஸ்த்திரிகளைப் பாத்துட்டு வரேன்"
எதிர்த்தவீட்டில் இருந்த குப்புசாமி சாஸ்த்திரிகள் அவசர அவசர அவசரமாக எழுந்தார்.
"சொல்லியிருந்தா, நானே உங்காத்துக்கு வந்திருப்பேனே! பெரியவா என்னைத் தேடிவரணுமா?"
"சாஸ்த்திரிகளே, நீங்க வயசிலே சின்னவாளா இருந்தாலும் வேதம் படிச்சவா. உங்களுக் கில்லேன்னாலும் நீங்க படிச்ச வேதத்துக்கு மதிப்புக்கொடுக்க வேண்டாமா? அதனாலேதான் வந்தேன்"
"ரொம்ப சந்தோஷம், நான் என்ன செய்யணும்னு சொல்லுங்கோ. "
"ஒண்ணுமில்லே,இந்தக் கிட்டாப் பயல்வந்திருந்தானாமே?'!"
"ஆமாம். அவனோடே தோப்பனாருக்கு நாளைக்குச் சிரார்த்தமாம். கையில் பணமில்லையாம். அதனாலே இரணியமாப் பண்ணிடலாம்னு சொன்னான். நானும் சரின்னுட்டேன். "
"சாஸ்த்திரிகளே, அவனோட தோப்பனார் சிரார்த்தத்துக்கு எவ்வளவு பணம் வேணுமின்னாலும் தரேன். நீங்க இன்னிக்கே சாமான்களையெல்லாம் வாங்கிண்டு அவாத்துக்குப் போங்கோ.."
"பேஷாப் போயிட்டு வரேன்"
"அதோட, சிரார்த்த சமையலுக்கு ஒரு மாமியையும் கூட்டிண்டு போங்கோ. இந்தாங்கோ இந்தப் பணத்தை வச்சுக்குங்கோ. இன்னும் ஏதாவது வேணுமின்னா நாளைக்குத் தரேன்"
"மாமா, உங்களைப்போல மனுஷாளைப் பார்க்கறதே புண்ணியம். உங்ககிட்ட வேலை பாக்கறதுக்குக் கிட்டா கொடுத்து வச்சிருக்கணும். "
"சாஸ்த்திரிகளே, ஏதோ ஆண்டவன் கொடுக்கிறான். செய்யறோம். இல்லேன்னா கொடுக்கப் போறோமா?"

"அதுக்குச் சொல்லலே, உங்க சிரத்தை யாருக்கு வரும்? முந்தா நாள் நத்தம் நாணுவய்யர் வந்திருந்தார். அவர் பொண்ணு கல்யாணத்துக்கு நாள் பார்க்கணுமாம். அவர் என்ன சொன்னார் தெரியுமோ? சமையல் சாம்பசிவ மய்யருக்கு எந்த நாளெல்லாம் வரமுடியும்னு கேட்டுச் சொல்றேன். அந்த நாட்களிலே ஒரு நல்ல நாள் பார்த்துச் சொல்லுங்கோன்னு சொன்னார். மாமா பேரு அவ்வளவு பிரசித்தம்"

"சாஸ்திரிகளே, எந்த விசேஷத்துக்கு வேலைக்குப் போறோமோ அந்த விசேஷம் விக்கினமில்லாம நடக்குணும்னு சிரத்தையாச் செய்யறோம். நம்ம அக்கறைதான் மத்தவாளை நம்மைத் தேடிவர வைக்கறது."

"உண்மைதான்"

"நீங்க மறக்காம கிட்டாவாத்துக்குப் போயிட்டு வந்துடுங்கோ"

"நீங்க கவலையே படாதேங்கோ. நான் பாத்துக்கிறேன்"

சாம்பசிவம் எழுந்து வீட்டை நோக்கி நடந்தார்.

சாம்பசிவத்தின் பரிவைக் கவனித்த சாஸ்த்திரிகளின் வயதான தாய், தன் கண்களில் வழிந்த கண்ணீரைத் தளர்ந்த கைகளால் துடைத்து விட்டுக் கொண்டார்.

**அத்தியாயம் 4**

# அவருக்கென்ன அந்தஸ்துக் குறைச்சல்?

வேலையில்லாத ஒரு சனிக்கிழமை மனத்தில் ஏதோ ஒரு திட்டத்தை வைத்துக்கொண்டு பாருவிடம் பேச்சுக் கொடுத்தார் சாம்பசிவம்.

“பாரு, நம்ம கோபாலைப் பத்தி என்ன நினைக்கிறே?”

“என்ன புதுசாக் கேக்கறேள். அவன் தங்கமான பையனாச்சே!”

”அவன் பிஎஸ்ஸி முதல் வகுப்பிலே பாஸ் செஞ்சிருக்கான் தெரியுமோ?”

“ரொம்ப சந்தோஷம். அவனுக்கு ஒரு வேலை வாங்கிக் கொடுங்கோ.”

“அதுக்கு ஏற்கனவே ஏற்பாடு பண்ணியாச்சு. கெமிக்கல் ஃபாக்டரி ராமசேஷய்யரிடம் சொன்னேன். வேலை போட்டுக் கொடுத்திட்டார். திங்கள் கிழமை வேலைக்குச் சேரப்போறான். ராமசேஷய்யர் பொண்ணுக்கு ஆவணி மாசம் கல்யாணம். நான்தான் சமையல்”

ஒருவழியா அந்தப் பையனுக்கு ஒரு விடிவு காலம் வந்துடுத்து. பாவம்! அவன் அம்மா கொஞ்ச நஞ்சமா கஷ்டப்பட்டிருக்கா?”

“பாரு, கோபாலோடே அம்மாவுக்கு வயசாயிடுத்து. முன்னாலே மாதிரி இப்போல்லாம் வேலை செய்ய முடியலியாம். அதனாலே அவனுக்கு ஒரு கல்யாணம் பண்ணி வச்சிடணும்னு நினைக்கிறாள்”

“அதுவும் சரிதான். பொண்ணு பார்த்தாச்சா?”

“இனிமேத்தான் பாக்கணும்”

“நீங்கதான் எத்தனையோ இடத்துக்குப் போறேளே! ஒரு நல்ல பொண்ணாப் பாருங்கோ. நீங்க சொன்னா அவன் தட்ட மாட்டான். கோபாலைக் கட்டிக்க எந்தப் பொண்ணும் கொடுத்து வச்சிருக்கணும்”

“பாரு நம்ம ரமாவைக் கோபாலுக்குக் கொடுத்தா என்ன?”

“என்ன சொன்னேள்?. ரமாவைக் கோபாலுக்குக் கொடுக்கிறதா? உங்களுக்குப் பைத்தியம் கிய்த்தியம் பிடிச்சிருக்கா? வீட்டுக்கு வீடு போய் அரைச்சுக் கரைச்சுக்

காரியம் பண்றா அவன் அம்மா. அவாத்திலே நம்ம பெண்ணைக் கொடுக்கிறதா?”
“பாரு நிதானமா யோசனை பண்ணிப் பாரு. ரமா யாரு. ஒரு சமையல்காரன் பொண்ணுதானே!”
“என்ன அப்படிச் சொல்லிட்டேள். உங்க கியாதி என்ன? புகழென்ன? நம்மாத்திலே பொண்ணெடுக்க ஆயிரம்பேர் காத்திண்டிருப்பா. நமக்கென்ன வீடில்லையா, வாசலில்லையா, ஜாம் ஜாம்னு கல்யாணம் பண்ணிக் கொடுக்கலாம்””
“கோபால் நன்னா படிச்சிருக்கான், முன்னுக்கு வர வாய்ப்பிருக்கு. சின்னப்பையன் வேறே! 21 வயதுதான் ஆகுது”
“நீங்க என்னதான் சொல்லுங்கோ எனக்குச் சம்மதமில்லே. ரமாவுக்குப் பதினெட்டு வயசாயிடுத்து. கோபாலுக்கும் ரமாவுக்கும் வயசு வித்தியாசம் ரொம்பக் கொறச்சலில்லையோ?”
“மூணு வயசு வித்தியாசமிருக்கே! அது போதாதா? உனக்கும் எனக்கும் மூணு வயசுதானே வித்தியாசம். ”
“நாம சொந்தத்துக்குள்ளே கல்யாணம் பண்ணிண்டோம். சொந்தம் விட்டுப்போகக் கூடாதுங்கறதனாலே வயசு வித்தியாசம் அதிகம் பாக்கமாட்டா?”
“அப்படி ஒரு சட்டம் இருக்கா?”
“எதுக்கன்னா நமக்குள்ளே சண்டை? கொஞ்சம் பெரிய இடமாப் பார்க்கலாம்”
“நீ யாரையாவது பார்த்து வச்சிருக்கியா?”
“ஏன் உங்க தங்கை பையன் விஸ்வநாதன் இருக்கானே? நல்ல உத்தியோகத்திலே இருக்கான், ஒரே பிள்ளை. அவனைப் பார்க்கலாமே?
“பாரு, அவ ஆத்துக்காரர் டெபுடிக் கலெக்டரா இருக்கார். அவர் நம்மோட சம்பந்தம் வச்சுப்பாரா?”
“ஏன் வச்சுக்க மாட்டார். நம்ம பொண்ணோடே அழகுக்கு என்ன கொறச்சல்?”
“ரமா அழகுதான். ஆனால் நான் சமையல்காரனாச்சே?”
“உங்களை ஊரெல்லாம் கொண்டாடறா? அவா என்ன கேட்டாலும் செய்ய வசதியிருக்கு. அப்புறம் என்ன?”

“இப்போ வசதி இருந்தது என்ன செய்ய? படிக்கவைக்க வசதியில்லேன்னுதானே உன் பையன் சின்ன வயசிலேயே வீட்டைவிட்டு ஓடிப்போயிட்டான்”
“அதுதான்னா என் மனசிலே ரணமா இருக்கு. அந்தப்பாவி இப்போ எங்கே இருக்கானோ? என்ன செய்யறானோ?”
பாரு கண்கலங்கினாள்.
“சரி சரி, ஒரு நல்ல காரியம் பேசும் போது அழாதே. உன் ஆசையைக் கெடுப்பானேன். நாளைக்கே திருச்சிக்குப் போ. அவா கிட்டேப் பேசி அவா அபிப்பிராயத்தைத் தெரிஞ்சிக்கோ”
“நீங்க வர மாட்டேளா?”
“நான் வரமாட்டேன்”
“ஏன்?”
“அவா என்ன சொல்லப்போறானு என்னாலே இப்பவே சொல்ல முடியும்.”
“அச்சாணியமா ஏதேனும் சொல்லாதீங்கோ. இப்போ நமக்கு என்ன குறைச்சல் ? நிச்சயமா ஒத்துப்பா?“
பார்வதி மறுநாளே திருச்சிக்குப் புறப்பட்டாள்.
சாம்பசிவத்தின் தங்கை அவளை நன்கு வரவேற்றாள். பார்வதி தன்னுடன் கொண்டு சென்றிருந்த முறுக்கும் ஜாங்கிரியும் நாத்தனாரின் பேச்சில் தித்திப்பை ஏற்றியிருந்தது
“அண்ணா சமையல்காரனா இருக்கிறதனாலே ஆத்திலே செஞ்ச ஜாங்கிரி கிடைக்கிறது. என்னமா பூப்போல இருக்கு. இவ்வளவு அழகா வேறு யாரலும் சுத்த முடியாது” என்றாள் மீனாக்ஷி. . சமையல்காரன் என்று மீனாக்ஷி சொன்னது பார்வதிக்குப் பிடிக்கவில்லை.
“ஏன் மன்னி, உன் பொண்ணைக் கூட்டிண்டு வரப்படாதோ?” என்று கேட்டாள் மீனாக்ஷி.
“அவளுக்கு அடுத்தவாரம் பரீக்ஷை”
“குழந்தை என்ன படிக்கிறா?”
“அவ பி ஏ முதல் வருஷம் படிக்கிறா. விஸ்வநாதன் என்ன பண்ணுறான்?”
””’அவன் இப்போ ஒரு கம்பனியிலே மேனேஜரா இருக்கான். பெரிய உத்தியோகம். கைநிறையச் சம்பளம். அடுத்த மாசம் கம்பனி அவனை லண்டனுக்கு அனுப்பறா. பதினைஞ்சு

நாள் லண்டன்லே இருப்பான்''
''ரொம்ப சந்தோஷம். அவனுக்குக் கல்யாணம் பண்ண வேண்டாமோ?''
''நானும் அதைத் தான் இவாள்டே சொல்லிண்டே இருக்கேன். பார்க்கலாம் அவர் டெபுடிக் கலெக்டரா இருக்காரோன்னோ. கலெக்டரும் நம்மடவாதான். அவர் நேத்துத்தான் இவர்ட்டே அவருடைய பொண்ணுக்கு விசுவைக் கேட்டார். நான் இவர்ட்டே சொந்தத்திலே தான் பண்ணணும்னு கண்டிப்பாச் சொல்லிவிட்டேன்''
''எனக்கு ரொம்ப சந்தோஷம், நானும் அது விஷய மாத்தான் வந்திருக்கேன். பழம் நழுவிப் பாலில் விழுந்தது மாதிரி ஆயிடுத்து.''
''என்ன சொல்றே மன்னி?''
''நம்ம விசுவை ரமாவுக்குப் பாக்கலாமேன்னு.''
''ரமாவுக்கா? ''
''ஆமாம். நீ கூடச் சொந்தத்திலே பொண்ணெடுக்கணும்னு சொன்னியே?''
''மன்னி, எங்காத்துக்காரர் டெபுடி கலெக்டரா இருக்கா ரோன்னோ? அவருக்குச் சம்பந்தியா வர்றவர் அவருக்குச் சமமா அந்தஸ்திலே இருக்கணும்னு ஆசைப்படறார். அதனாலே என் தம்பி இராமாமிர்தம் பொண்ணு அஸ்வினியைப் பார்க்கலாம்னு இருக்கோம். இராமாமிர்தம் பாங்கிலே ஆபீஸரா இருக்கான்
சென்ற மாதம்தான் இராமாமிர்தம் சாம்பசிவத்திடம் 5000 ரூபாய் கடன் வாங்கிக் கொண்டு சென்றது பார்வதிக்கு நினைவுக்கு வந்தது. மனத்துக்குள் சிரித்துக்கொண்டாள்.
''அப்படியே செய்.'' என்றாள் பார்வதி.
''தப்பா நெனைச்சுக்காதே மன்னி. அண்ணா கிட்டச் சொல்லு. இன்னும் ஒரு வருஷத்திலே இவர் ரிட்டயர்ட் ஆயிடுவார். வேலையில் இருக்கிற போதே விசுவுக்குக் கல்யாணம் செய்துவிட வேண்டும் என்று நினைக்கிறார். எனக்குக்கூட ரமாவை விசுவுக்குக் கல்யாணம் பண்ணணும்னு எண்ணம் இருந்துது. என்ன செய்யறது? அப்பாவும் பிள்ளையும் அந்தஸ்து பாக்கறாளே!'' என்றாள் மீனாக்ஷி

அந்த நேரம் பார்த்து விஸ்வநாதன் உள்ளே நுழைந்தான். ஆள் வாட்ட சாட்டமாக இருந்தான். தலைதான். கொஞ்சம் வழுக்கை. கண்ணாடி போட்டுக் கொண்டிருந்தான்.

“விசு, இது யாரு தெரியுமோ?”

அவன் கண்ணாடியைக் கழற்றிவிட்டுப் பார்த்தான்.

“இவங்க யாரும்மா?”

“உங்க மாமிடா. “

“ஓ, அந்தச் சமையல்கார மாமா பெண்டாட்டியா?” என்று கேட்டான் விஸ்வநாதன். அவன் பேச்சுக் குழறியது. தள்ளாடிக்கொண்டே தன் அறைக்குச் சென்றான்.

“மன்னி, ஒண்ணும் தப்பா எடுத்துக்காதே. அடிக்கடி வந்துண்டு போயிண்டு இருந்தாத்தானே உறவு முறை தெரியும்? விசு கம்பெனியிலே பெரிய மேனேஜரில்லையா? அதுனாலே பெரிய பெரிய மனுஷாளையெல்லாம் ஹோட்டல்லே சந்திக்கிறான். அங்கே அவாளுக்கு என்னவெல்லாமோ கொடுத்து அவாளைச் சரிக்கட்ட வேண்டியிருக்கு. அவாளுக்கு வெளிநாட்டுச் சரக்கு வாங்கிக் குடிக்கக் கொடுக்கிறான். இவனும் குடிச்சாக வேண்டியிருக்கு. பெரியவங்களோடே பழகினா இப்படித்தான். இந்தக் காலத்து நாகரிகமே இப்படித்தான்.” என்றாள் மீனாக்ஷி

சிகரெட் புகை நாற்றம் நாசியில் நுழைந்தது.

நல்ல வேளை ரமாவை இவா ஒத்துக்கலை.

உண்மையாகவே பார்வதி “அந்தஸ்தை’ வாழ்த்தினாள்.

“அப்போ நான் இன்னிக்கே கெளம்பறேன்” என்றாள் பார்வதி.

“என்ன அதுக்குள்ளே அவசரம். இரண்டு நாள் இருந்துட்டு திருவானைக்கா, ஸ்ரீரங்கம், திருச்சி மலைக்கோட்டை இதையெல்லாம் பாத்துட்டுக் கெளம்பலாம்.. இவர் பெங்களூருக்குக் கேம்ப் போயிருக்கார். வர நாலுநாள் ஆகும். கார் ஆத்திலேதான் இருக்கு. டிரைவர் இருக்கான். உன்னை நான் எல்லா இடத்துக்கும் காரிலே கூட்டிண்டு போறேன்” என்றாள் மீனாக்ஷி.

“உன் அண்ணா எங்கேயாவது வேலைக்குப் போயிடுவார். ரமா ஆத்திலே தனியா இருப்பா. நான் உடனே

போறதுதான் நல்லது'' என்றாள் பார்வதி.
"கொஞ்சம் இரு, சாப்பிட்டுவிட்டுப் பேசுவோம்''
"இரயிலில் கூட்டம் அதிகமாயிருக்கும். அப்புறம் இடம் கிடைக்கிறது கஷ்டம்.. கொஞ்சம் சீக்கிரம் போனா இடம் பிடிக்கலாம்." என்றாள் பார்வதி.
"மன்னி, வராதவ வந்திருக்கே, நாளைக்குப் போகலாம். இரயில்லே இடம் கிடைக்கற பத்திக் கவலைப்படாதே! விசுவிடம் சொன்னாப்போதும், படுக்கை வசதி ரிசர்வ் பண்ணிக் கொடுத்திடுவான். அவனுக்கு இங்கே அவ்வளவு செல்வாக்கு'' என்றாள் மீனாக்ஷி.
மறுநாள் உண்மையிலேயே இரயிலில் படுக்கை வசதி கிடைத்தது.
விஸ்வநாதன் கில்லாடிதான்.

அத்தியாயம் 5

# மனங்கள் நெருங்கின

அது ஆடி மாதம். அந்த மாதத்தில் கல்யாணங்கள் நடப்பதில்லை. ஏதாவது கோயில் திருவிழாவுக்குச் சமையலுக்குக் கூப்பிட்டால்தான் உண்டு. ஆடிமாதம் தவிர புரட்டாசி, மார்கழி ,மாதங்களில் கூட வரும்படி குறைவுதான்.

மிக வேண்டிய நண்பர் ஒருவர் சாம்பசிவத்தைப் பம்பாய்க்கு அழைத்தார். ஆடிமாத மாகையால் சாம்பசிவம் வருவதற்கு ஒத்துக்கொண்டார். வெளிநாட்டிலிருந்து வரும் சில பயணிகளுக்காக விதவிதமாகத் தென்னாட்டுப் பலகாரங்கள் செய்து கொடுப்பதற்காக அவரை அழைத்தார்கள். பத்து நாட்களுக்குமேல் அவர் அங்கே தங்கவேண்டும். ஊருக்குக் கிளம்புவதற்குமுன் கோபாலை அழைத்து வீட்டைச் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளும் படி சொல்லிவிட்டுச் சென்றார். அவருடன் கிட்டாவும் பட்டாவும் சென்றிருந்தார்கள்.

அலுவல் பணி முடிந்தவுடன் கோபால் சாம்பசிவத்தின் வீட்டிற்கு வந்துவிடுவான். வெளியிலே இருந்த திண்ணையில்தான் அவனுக்குப் படுக்கை. வீட்டுக்குள்ளே வந்து படுத்துக் கொள்ளும் படி பார்வதி கூறியும் அவன் ஒத்துக் கொள்ளவில்லை. திண்ணையிலே கொசுக்கடித்தது. காற்று அவ்வளவாக இல்லை. கொசுக்கடியைப் பொறுத்துக்கொண்டான்.

ஒருநாள் இரவு திடீரென்று பலத்த மழை பெய்தது. திண்ணையிலே சாரல் அடித்தது. பார்வதி உள்ளே அசந்து தூங்கிக்கொண்டிருந்தாள். ஆனால் ரமா தூங்கவில்லை. பாவம். திண்ணையில் மழைச்சாரலில் நனைவாரே!

அம்மாவை எழுப்பினாள். பார்வதி புரண்டு படுத்தாள். மீண்டும் எழுப்பினாள். ஒருவழியாகப் பார்வதி எழுந்தாள்.

“அம்மா வெளியிலே மழைபெய்யுதம்மா. அவரை உள்ளே வந்து படுத்துக்கச்சொல்லு.”என்றாள்

கதவைத் திறந்து வெளியே வந்தாள் பார்வதி. . கோபாலை உள்ளே வந்து படுத்துக் கொள்ளச் சொன்னாள். அவன் அங்கேயே இருப்பதாகச் சொல்லிவிட்டான்.

“இப்படி மழையிலே நனைஞ்சா ஜுரம் வரும்டா”
”எனக்கு  இதெல்லாம் பழக்கம்தான் மாமி. மழையிலே நனையறது கூட எனக்குப் பிடிக்கும். “என்றான்
“உனக்குப் பிடிக்கும். ஆனால் ஜலதோஷத்துக்கும் பிடிக்கும். நாங்க ரேழியிலேதான் படுத்திருக்கிறோம். நீ உள்ளே வந்து நடையிலே படுத்துக்கோ” என்றாள் பார்வதி
“வேண்டாம் மாமி”
அவனை மேலும் வற்புத்த விரும்பவில்லை. ஆனால் ரமா விடுவதாக இல்லை.
“அம்மா இவர் இப்போ உள்ளே வல்லே, நானும் திண்ணையிலேதான் உக்காரப்போறேன்”
கோபாலின் பாடு தர்ம சங்கடமாகப் போய்விட்ட்து. பெண்கள் மட்டும் இருக்கும் வீட்டில் அவன் உள்ளே போய்ப் படுக்க விரும்பவில்லை. ஆனால் ரமாவின் போராட்டம் வென்றது.

உள்ளே போனான். நடைவிளக்கைப் போட்டான். தான் கொண்டுவந்திருந்த புத்தகத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கினான்.
அன்று இரவு அவன் படுத்துக் கொள்ளவே இல்லை. இரவு மழையிலே நனைந்ததால் அவனுக்குச் சரியான ஜலதோஷம் . லேசாக ஜுரம்கூட அடித்தது. அதோடு அலுவலகம் சென்றான். அன்று இரவு படுக்கவருமுன் தன் தாயையையும் அழைத்துக்கொண்டு வந்திருந்தான். . அம்மாவோடு நடையில் படுத்துக் கொண்டான். ஜலதோஷத்தின் காரணமாக இருமல் தொல்லை

கொடுத்தது. இருமல் மருந்து பாட்டிலைக் கொண்டுவந்து ரமா நடையிலே வைத்துவிட்டுச் சென்றாள்.
அன்று இரவு திடீரென்று பார்வதி மாமிக்கு வலிப்பு வந்தது போல் கை கால்கள் இழுக்கத் தொடங்கின. ரமா பதறிப் போனாள். கோபால் உடனே போய் டாக்டரை அழைத்து வந்தான். நர்சிங் ஹோமுக்குக் கூட்டிச் சென்று சேர்த்துவிடச் சொன்னார். அன்று இரவு முழுதும் ரமாவும் கோபாலின் அம்மாவும் நர்சிங் ஹோமிலேயே தங்கினார்கள்.

மறுநாள் இரவு கோபாலின் அம்மா அங்குத் தங்கினாள். ஒருவருக்கு மேல் அங்குத் தங்கக் கூடாதென்று சொல்லிவிட்டார்கள். ரமாவை வீட்டுக்குப் போகச் சொன்னாள் மாமி.
“பக்கத்தாத்து மாமியை ரமாவுக்குத் துணையாகப் படுத்துக்கொள்ளச் சொல்லட்டுமா? “என்று கேட்டான் கோபால்
“உன்னை விட அவளுக்குப் பெரிய துணை வேறு யாரும் இல்லை” என்றாள் மாமி
“மாமி, நான். எப்படி.. வேறு யாரையாவது,,”” என்று இழுத்தான் கோபால்.
“வேண்டாம். வேண்டாம். நீயே போ” என்றாள் மாமி
“அன்று திண்ணையில் படுத்துக் கொண்டான். ரமா உள்ளே தூங்க வில்லை. கோபால் திண்ணையில் விளக்கைப் போட்டுப் படித்துக் கொண்டிருந்தான்.
இரண்டு மனங்கள் நெருங்கிக் கொண்டிருந்தன.

-----

அத்தியாயம் -6

# மானம் பெரிது

பெரிய கெமிக்கல் கம்பெனி முதலாளி இராமசேஷய்யர் வீட்டில் கல்யாணம். சன்னதித் தெரு அடைக்கப் பந்தல் போடப்பட்டிருந்தது. இராமசேஷய்யரின் வீடு சன்னதித் தெருவையும் பின்புறமுள்ள மேட்டுத் தெருவையும் இணைத்தது. இப்படி அடுத்தடுத்து நான்கு வீடுகள் அவருக்குச் சொந்தம்.

பந்தல் காண்ட்ராக்ட் பழனிச்சாமிப் பண்டாரம் இதுவரை தான் செய்திராத புதிய புதிய வேலைப்பாடுகளை யெல்லாம் காட்டியிருந்தான். பந்தல் செலவே இருபதாயிரம். மேற்குப் புறமும் கிழக்குப் புறமும் தட்டுப்பந்தல். இரண்டு வீடுகளுக்கு நடுவே மட்டும் கூடாரப் பந்தல். செவ்வகம் செவ்வகமாக உயரே உயரே எழும்பியிருந்தது. உச்சியிலே ஐம்பட்டை வடிவ முகப்பு. இரண்டு பக்க நுழை வாயில்களிலும் அலங்கார முகப்பு. பந்தலில் ஒவ்வொரு செவ்வகப் பட்டையிலும் ஜரிகை பார்டர் துணி தைக்கப்பட்டு அழகாகக் காட்சி கொடுத்தது. அங்கங்கே கலர்கலராக இரசகுண்டுகள் தொங்கின.

நுழை வாசலில் கொழுத்த தார்களோடு கூடிய இரண்டு வாழை மரங்கள். இராமசேஷய்யரின் வாழைத் தோப்பில் கல்யாணத்துக்கு வெட்டப்பட என்னவே வளர்க்கப் பட்டிருந்தன போலும். மொந்தன் தார்.

சீவலப்பேரி சிங்காரம் இரட்டை நாயனம். பாரதியாரோட அப்பா கல்யாணத்திலே சிங்காரத்தோடே கொள்ளுப்பாட்டன் நாயனமாம். சும்மா சொல்லப்படாது. நல்ல பாண்டித்தியம். இத்தனை இருந்தும் சமையலுக்குச் சாம்பசிவம் இல்லாவிட்டால் எப்படி?.

சாம்பசிவம் 52 பேர்களோடு தண்டு இறங்கியிருந்தார். ஊரடைக்கச் சாப்பாடு. சமையல் செய்ய இடம் வேண்டு மென்பதற்காக மூன்றாவது வீட்டையும் நான்காவது வீட்டையும் பிரிக்கும் தாழ்வாரச் சுவரையே இடித்து விட்டிருந்தார். இராமசேஷன். சமையல் செய்யும் இடத்துக்கு மேலே தட்டுப்பந்தல். இரண்டு பக்கமும் பள்ளம் தோண்டி நீள நீள அடுப்புகள். சாதம் வடிக்கப் பெரிய

வார்ப்பு. ஒரே சமயத்திலே 15 படி அரிசி வடிக்கலாம். ஊட்டுப்புரைப் பத்திரங்களைப்போல உயர உயரமா, அகலம் அகலமாப் பல பாத்திரங்கள். ஒரு அறை முழுதும் காய்கறி. இராமசேஷய்யர் சாம்பு வந்தவுடன் சமையல் கூடத்துக்கு வந்தார்.

“என்ன, சாம்பு அய்யர்வாள். இடமெல்லாம் எப்படி?”

“பிரமாதம். உங்களுக்குச் சொல்லணுமா? பெரிய பேக்டரியையே நிர்வகிக்கிறவர் நீங்கள். உங்க ஏற்பாட்டைக் குறை சொல்ல முடியுமா? பார்த்துப் பார்த்துச் செஞ்சிருக்கேள்”

“நீர் சொன்ன மாதிரியே அடுப்பு இருக்கிற இடத்துக்கு மேலே பந்தலை உயரமாப் போடச் சொன்னேன். அங்கே மட்டும் இரட்டைத்தட்டுப் பந்தல். ஒரு வேளை மழை வந்தால் அடுப்புக்கு மேலே ஒழுகக் கூடாதில்லையா?”

“உங்க நல்ல மனசுக்கு எல்லாமே நன்னா நடக்கும். சமையலைப்  பத்தி நீங்க கவலைப் படவேண்டாம். நான் பார்த்துக்கறேன்”

“ஒரே பொண்ணு ஓய். வேறு யாருக்காகப் பண்ணப்போறேன். கல்யாணத்துக்கு வந்தவாள்ளாம் ஒரு வருஷத்துக்குப் பேசறாப்பலே உம்ம சமையல் இருக்கணும்,

“ஒரு வருஷத்துக்கென்ன? ஆயுளுக்கும் பேசற மாதிரி ஜமாய்ச்சுடலாம்”

”வெளிநாட்டுக் காராள்ளாம் நிறையப்பேர் வருவா.  எங்க கம்பெனிக்கு ஹெட் ஆபீஸ் இலண்டனிலே இருக்கு அங்கேருந்தெல்லாம் வந்திருக்கா. அவாளுக்கு நம்ம பக்கத்துச் சாப்பாடு ரொம்பப் பிடிக்கும்.”

“அவாளுக்குன்னு சைவத்திலே ஏதாவது ஸ்பெஷலா செய்யணும்னா சொல்லி அனுப்புங்கோ. செஞ்சிடலாம்”

“உங்க பெண்ணுக்கு அடுத்த மாசம் கல்யாணமில்லையா?

“ஆமாம். உங்க தயவிலே நடக்கிறது. கல்யாணச் சந்திரம் நீங்கதான் ஏற்பாடு பண்ணிக் கொடுத்தேள்.. அன்னிக்குப் பாக்க ஏகப்பட்ட கல்யாணம். எல்லாச் சத்திரமும் புக்காகியிருந்தது. நீங்க உதவி செய்திருக்காட்டா நல்ல சத்திரம் கிடைச்சிருக்காது.  மாப்பிள்ளைப் பையணுக்கு நீங்கதான் வேலை போட்டுக் கொடுத்தேள்”

“ஏதோ என்னாலே ஆன உபகாரம். கல்யாணம் ஆகட்டும். உம்ம மாப்பிள்ளைக்குப் புரொமோஷன் கொடுத்து என் பி ஏவா வாப்போட்டுக்கிறேன்”
“ரொம்ப சந்தோஷம். ”
”பையன் பேரு என்ன சொன்னேள்?”
“கோபால்”
“நல்லது கவனிச்சுக்குங்கோ. நான் வரேன்.”
“மறுநாள் காலை. இட்டிலி மலைபோல் வார்த்துக் கொட்டப்பட்டிருந்தது. மலை கரைந்து கொண்டே போயிற்று. அவ்வளவு கூட்டம்.
சமையல் பந்தல் போடப்பட்டிருந்த இடத்திலே திறந்தவெளி அதிகம் இல்லாததனாலே ஒரே புகை. அது மட்டுமன்றி அனல் அடித்தது. சமையல்காரர்கள் அத்தனை பேரும் வேர்வையில் குளித்துக் கொண்டிருந்தனர். அது அவர்களுக்குச் சகஜம்.
அன்றைக்கு லேட் முகூர்த்தம். 10 மணியிலேருந்து 11 / 1/2 மணிக்குள்.

9 மணியிருக்கும். இராமசேஷனுடைய தம்பியின் மகன் விஸ்வேஸ்வரன் யாரோ இரண்டு வெள்ளைக்காரர்களை அழைத்துக் கொண்டு சமையல் கூடத்துக்கு வந்தான்.
“சாம்பு மாமா. இவா பிரிட்டனிலேருந்து வந்திருக்கா. கல்யாணத்தை வீடியோ எடுக்கிறா . நீங்க சமையல் செய்யறதையும் பிடிக்கணுமாம். பெரியப்பா அனுப்பினார்.” என்றான்

“நாங்கள் சமையல் செய்யறதை இவா படம் எடுக்க வேண்டாம்” என்றார் சாம்பு
” என்ன மாமா, இப்படிச் சொல்றீர்? இவா பெரியப்பாவுக்கு ரொம்ப வேண்டியவா”
“வெளிநாட்டிலேருந்து வரவா இந்தியாவைப் பத்தி எப்படிப் படம் எடுத்துக்காட்டறா தெரியுமோ? இங்கேயுள்ள பாம்பு கீரி, சாமியார் சாமியாட்டம், பிச்சைக்காரன் இப்படியெல்லாம் எடுத்து வெளிநாட்டிலே போட்டு நம்ம பேரையே கெடுத்துறா. பேப்பரிலே படிச்சேன்”

“அதுக்கும் நீங்க சமையல் செய்யறதைப் படம்பிடிப்பதற்கும் என்ன சம்பந்தம் இருக்கு?”
“இருக்கிறதனாலேதானே சொல்றேன். டே கிட்டா அங்கே பாரு. அந்த அடுப்பு வெறகை இழுத்துவிடு.... என்ன சொன்னேன். .. வெள்ளைக்காரா ஊர்லே சமையல் பண்ற இடத்திலே கேஸ் அடுப்பு வச்சிருப்பா. இடம் சுத்தமா இருக்கும். சமையல் பண்றவா டீக்கா டிரஸ் பண்ணிண்டு இருப்பா. இங்கே அப்படியா? இங்கே விறகு அடுப்பு. ஒரே புகை. நாங்கள்ளாம் மேலே சட்டை கூட இல்லாம வேர்வையிலே குளிச்சிண்டிருக்கோம். நம்ம நாட்டிலே இதை மாத்த முடியுமோ? இன்னும் கொஞ்ச நாளைக்கு நிச்சயமா முடியாது. அந்த நிலையைப் படம்பிடிச்சு அவா நாட்டிலே காட்டணுமா? இண்டியன்ஸெல்லாம் சுத்தமா சமையல் பண்றதில்லை, சுத்தமா சாப்பிடுவதில்லைன்னு சொல்லுவா. நம்ம நாட்டுப் பேரை நாம் ஏன் கெடுக்கணும்”

“கல்யாண நிகழ்ச்சிகளையெல்லாம் படம் பிடிக்கப் போறா”.
“அது வேறே விஷயம். கல்யாண சம்ப்ரதாயத்திலே நாம இன்னும் உசந்துதான் இருக்கோம். அதைப் படம்பிடிச்சா நல்லதுதான். நமக்கும் பெருமைதான்”
காமிராவைக் கையில் வைத்திருந்த வெளிநாட்டுக்காரர் சற்றே புன்னகைத்தார்.
சாம்பசிவம் வீடியோ எடுக்க அனுமதிக்கவில்லை என்ற சேதி இராமசேஷன் காதுக்கு எட்டியது. சமையல் கூடத்துக்கு விரைந்து வந்தார்.
“இதெல்லாம் என்ன சாம்பு அய்யர்? இவாளை வீடியோ எடுக்கக் கூடாதுன்னு சொல்றீராமே?”
“சமையல் பண்றதை வீடியோ எடுக்கக் கூடாதுன்னு சொன்னேன்”
“ஏன்?”
“இங்கே எங்களைப் பார்த்தேளா? எங்கேயும் புகை. நாங்க எல்லா வேர்வையிலே நனைஞ்சிருக்கோம். இதை அவா படம் எடுக்கணுமா.?
“சாம்பு, இது என்வீடு, எங்க வீட்டுக் கல்யாணம். எங்கே வேணுமின்னாலும் என் இஷ்டப்படி என்ன வேணுமின்னாலும் செய்வேன். “

“செய்யுங்கோ. பூஜை அறையிலே போய் யாராவது காலலம்புவாளா? இல்லை பாத் ரூமிலே போய் யாராவது இலைபோட்டுச் சாப்பிடுவாளா? எங்க வேணுமின்னாலும் எதை வேண்டுமானாலும் செய்ய முடியாது”
“அது எனக்கும் தெரியும். இவா எங்க ஹெட் ஆபீஸிலிருந்து வந்திருக்கா. இவாள வீடியோ எடுக்கச் சொல்லத்தான் போறேன். நீரென்ன அவாளைத் தடுக்கிறது.?”
“எனக்கு இதிலே விருப்பமில்லை”
“உம்ம விருப்பத்தைப் பத்தி எனக்கென்ன கவலை. நீர் எங்கிட்டே கூலி வாங்கிண்டு வேலை செய்யறவர். எங்க உப்பைத் தின்னு வாழறவர்”
“சார், நீங்க பெரிய அதிகாரி, நீங்க கோபப்படலாம். நாங்க கோபப்பட முடியுமா? உண்மையைச் சொன்னா எங்க உப்பைத் தின்னுதான் நீங்க வாழறீங்க.”
“என்ன திமிர் உமக்கு’
“உண்மையைத் தான் சொல்றேன். அதோ பாருங்கோ. சாம்பாரைக் கிளறிண்டிருக்கானே , அவன் உடம்பிலே எவ்வளவு வேர்வை. ! துடைச்சுத் துடைச்சுப் பார்த்தாலும் நிக்காது. அவன் வேர்வை ஒரு துளியாவது சாம்பாரிலே விழாமலா இருக்கும்? இங்கே இருக்கிற ஒவ்வொருவருடைய உப்பும் எதோ ஒரு வகையிலே ஏதோ ஒரு பண்டத்திலே கலந்துதான் இருக்கும். இப்போச் சொல்லுங்கோ. யாரு உப்பை யாரு சாப்பிடறா?”

“பெரியப்பா. இவாள்டே இப்ப சண்டைபிடிச்சா சமையல் செய்யறதை நிறுத்திடப்போறா” என்றான் விஸ்வேவரன்.
“அம்பி எங்களை என்னென்னு நினைச்சே. நாங்க வாக்குச் சுத்தமானவா. வாக்குக் கொடுத்தா என்னதான் அவமானம் வந்தாலும் ஒப்புக் கொண்டதை திருப்திகரமா முடிச்சுக் கொடுத்துத்தான் போவோம். அவர் பக்கத்து நியாயத்தை அவர் சொல்றார். என் பக்கத்து நியாயத்தை நான் சொல்றேன்”
“மிஸ்டர் வில்லியம்ஸ் யூ கேன் ப்ரொசீட். டோண்ட் ஒர்ரி அபௌட் திஸ் மேன்”“ என்று சொல்லிக்கொண்டே வெளியே சென்றார் இராமசேஷய்யர்.

“மிஸ்டர் விஸ்வேஸ்வரன். யூ கேன் கோ. ஐ வில் மேனேஜ்” என்றார் வில்லியம்ஸ்.
“விஸ்வேஸ்வரன் கல்யாண மண்டபத்தை நோக்கிப் போனான்.
காமிராவை உடனிருந்த உதவியாளர் கையில் கொடுத்துவிட்டு வில்லியம்ஸ் சாம்பசிவத்தை நோக்கி வந்தார். அவருடைய கைகளைப் பிடித்துக்கொண்டு, “யூ ஆர், ரியலி கிரேட்” என்றார்.
சாம்பசிவத்துக்கு ஒன்றும் புரியவில்லை.
“உங்களுடைய தேசபக்தியைப் பாராட்டுகிறேன்” என்று தூய தமிழில் சொன்னார் வில்லியம்ஸ்.
சாம்பசிவத்தின் கண்கள் பனித்தன.
“உங்கள் அட்ரஸ் கொடுங்கள். உங்களை வந்து பார்க்கிறேன்” என்றார் வில்லியம்ஸ்.
“நீங்கள் எப்படி... தமிழில் ....” என்று இழுத்தார் சாம்பசிவம்.
“நான் ஊட்டியில் பிறந்து வளர்ந்தவன். “என்றார் வில்லியம்ஸ்.
சாம்பசிவம் வெற்றிலைப் பையைத் திறந்து அதிலிருந்து ஒரு சிறிய காகித்தை எடுத்து அவரது முகவரியை எழுதிக்கொடுத்தார்.. வில்லியம்ஸ் அதை வாங்கிக்கொண்டு சென்றார்.
இதற்கிடையில் இராமசேஷன் திருமணத்திற்கு வந்திருந்த கோபால் கல்யாணத்தில் எடுபிடி வேலைகள் செய்துகொண்டிருந்தான்.. அவன் சமையல் கூடம் பக்கமே வரக்கூடாதென்று சாம்பு சொல்லியிருந்தார்.. இராமசேஷன் அவனை அழைப்பதாக ஒருவன் வந்து சொன்னான்.
கோபால் சென்று இராமசேஷனைச் சந்தித்தான்..
“கோபால், உன் வருங்கால மாமனார் சமையல் கூடத்திலே வீடியோ எடுக்க அனுமதிக்கலே. வாய்க்கு வந்த படி பேசறார். இதெல்லாம் நல்லதற்கில்லே என்று அவரிடம் சொல். வீடியோ எடுக்க அனுமதிக்கணும்னு சொல். நான் ரொம்பக் கோபமாயிருக்கேன்னும் சொல்” என்றார் இராமசேஷன்.

“சார், அவர் ஒரு முடிவெடுத்தா மாத்த முடியாது. அவர் முடிவு எப்பொழுதும் நியாயமாகத்தான் இருக்கும்” என்றான் கோபால்.
“கோபால், ஐ ஏம் யுவர் மாஸ்டர்” என்று கத்தினார் இராமசேஷன்.
“சார், நீங்க மாஸ்டர். அவர் எனக்குக் கிராண்ட் மாஸ்டர்”
“இப்போ நான் சொன்னதைச் செய்யப்போகிறாயா இல்லையா?”
“நீங்கள் சொல்வதை மறுக்கலே. போய்ச் சொல்கிறேன். ஆனா....”
“ஆனால் என்ன?
“நான் இப்போழுதிலிருந்தே நீங்கள் கொடுத்த வேலையை இராஜினாமாச் செய்ததாக எடுத்துக்குங்கோ. அவருடைய வேலைக்காரனாப் போய்ச் சொல்கிறேன்” என்றான் கோபால். .
சாஸ்த்திரிகள் வளர்த்த ஹோமத்தில் நெய்யை அதிகம் ஊற்றிவிட்டாரோ என்னவோ? தீ குப்பென்று பொங்கி எழுந்தது.

வில்லியம்ஸ் இராமசேஷனை நோக்கி வந்து கொண்டிருந்தார்.
“மிஸ்டர் இராமசேஷன், பி கூல். ஹி இஸ் ரைட். யு மஸ்ட் பி ப்ரௌட் ஆஃப் ஹிம்” என்றார் வில்லியம்ஸ்.
இராமசேஷனின் கோபம் ஓரளவு தணிந்தது.

இராமசேஷன் கோபப் பட்டாலும் வில்லியம்ஸ் மிகவும் சாந்தமாய்ப் பேசி “யு ஆர் கிரேட்” என்று சொன்னது சாம்புவுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது.
“மாமா, உங்காத்துக்குப் பக்கத்தாத்துப் பையன் வரான்” என்றான் கிட்டா.
முந்திரிப் பருப்பை வறுத்துக்கொண்டிருந்த சாம்பசிவம் அதைச் சிவக்க வறுத்து எடுத்து வைத்துவிட்டு எழுந்து வந்தார்.
“மாமா, உங்காத்து மாமிக்கு வலிப்பு மாதிரி வந்து கீழே விழுந்துட்டா. டாக்டர் ஆஸ்பத்திரியிலே சேர்க்கச் சொல்றார். உங்களை உடனே கூட்டிக்கொண்டு வரச் சொன்னா”

என்றான் வந்தவன்.

“மாமா, உடனே கிளம்புங்கோ. நாங்க கவனிச்சுக்கிறோம்” என்றான் கிட்டா.
“அது தப்பு. இப்போ நான் போனால் இராமசேஷன் சார் சொன்னதுக்குக் கோபப்பட்டுக் கொண்டுதான் போய்விட்டதாக நினைப்பார்கள். என்னவானாலும் எடுத்த வேலையை முடித்துவிட்டுத் தான் போகணும்”
“இல்லை மாமா.”
“ஒண்ணுஞ் சொல்லாதே. நான் வரலேன்னா பாரு புரிஞ்சுப்பா. இராமசேஷன் சார் என்ன சாதாரணமானவரா? அவாத்துக் கல்யாணத்திலே எந்தக் குறையும் வரக்கூடாது. கிட்டா நீ இந்தப் பையன் கூடப் போ. “
“மாமா, கோபாலை அனுப்பலாமே. அவன் படிச்சவன்”
“டே, கோபால் இப்போ இராமசேஷனிடம் வேலை செய்யறவன். அவன் கல்யாண வேலைகளிலே ஒத்தாசையா இருக்கான். அவனை அனுப்ப எனக்கு அதிகாரம் கிடையாது. நீ உடனே கிளம்பிப்போ. இந்தா , இந்தப் பணத்தை வாங்கிக்கோ. மாமியை டாக்டர் ராஜு கிளினிக்கிலே அட்மிட் பண்ணு. அவர் நமக்கு ரொம்ப வேண்டியவர். நன்னா கவனிப்பார். நான் ராத்திரி பத்துமணிக்கு மேலே வரேன்” என்றார் சாம்பசிவம். கிட்டா பையனுடன் கிளம்பினான்.
“டே, சீனு, அந்தப் பக்கத்திலே எரிச்சலைக் கொறை. பட்டா, எஸ்ஸர் ஒரு பாத்திரத்திலே கொதித்துக் கொண்டிருக்கட்டும்.. ராமு நீ போய் நெய்யை ஸ்டோர் ரூமிலிருந்து கொண்டுவந்து உருக வை” என்று மளமளவென்று உத்தரவுகளைக் கொடுக்கத் தொடங்கினார் சாம்பசிவம்.

சென்றுகொண்டிருந்த கிட்டாவின் காதுகளில் சாம்பசிவத்தின் உத்தரவுகள் விழுந்தன. கிட்டாவுக்கு விளங்கியது. வேலையில் இருக்கும் போது மாமாவை எந்தக் கவலையும் தின்னாது. அவர் கவலைகளைத் தின்றுவிடுவார்.

அத்தியாயம் 7

# நினைப்பது ஒன்று நடப்பது ஒன்று

சாம்பசிவம் என்றும் கையில் கன்னத்தை வைத்துக்கொண்டு அமர்ந்தது கிடையாது. அன்று அப்படி அமர்ந்திருந்தார். அத்தனை சோதனைகள். கோபால் வேலையை இராஜினாமா செய்துவிட்டான். அவன் அப்படிச் செய்ததில் அவருக்கு மகிழ்ச்சிதான். அந்தத் தன்னம்பிக்கை அவரை ஈர்த்தது. அவன் பிழைத்துக் கொள்வான். அவன் கோழையல்ல. அவனுக்கு ஒரு வேலை பார்க்க வேண்டும்.

அவரது மனைவி பார்வதி எழுந்து நடமாடத் தொடங்கியிருந்தாள். டாக்டர் தினமும் வந்து பார்த்துக் கொண்டிருந்தார். நல்ல கைராசி. உண்மையிலேயே பார்வதி செத்துப் பிழைத்தாள்.
கல்யாணத்துக்கு இருபது நாள்கள்தான் இருந்தன. பார்வதி தெம்பு பெற வேண்டும். அவள் தைரிய சாலி இன்னும் பத்து நாள்களில் பத்துக்கிலோ மீட்டர் தொடர்ந்து நடக்கும் தெம்பு வந்துவிடும். பாவம். கிட்டாவின் மனைவிதான் அவளுக்குத் துணையாக இருந்து அவளைக் கவனித்துக் கொண்டாள்.
இராமசேஷனின் கோபம் பிரசித்தம். கடைசி நேரத்தில் கல்யாணச் சத்திரத்துக்காரரை அட்வான்ஸைத் திருப்பிக் கொடுக்கச் சொன்னாலும் சொல்லிவிடுவார். வேறொரு சத்திரமும் பார்த்து வைத்துக்கொள்வது நல்லது. சத்திரம் எங்கே கிடைக்கிறது.! ஒன்றும் அமையவில்லை என்றால் வீட்டுக்கு முன்னே பந்தலைப் போட்டு நடத்திவிட வேண்டியதுதான். ஆனால் கல்யாணப் பத்திரிகை அச்சடிக்க வேண்டுமே! எந்த இடத்தில் நடப்பதாகப் போடுவது? குழப்பம் தீர்ந்த பாடில்லை.
“சார்” என்ற குரல் வீட்டுக்கு வெளியே கேட்டது. கிட்டா வெளியில் போய்ப் பார்த்தான். வில்லியம்ஸ் நின்றுகொண்டிருந்தார். அவருடன் ஒரு இளைஞன்.

“இஸ் மிஸ்டர் சம்பசிவம் அவைலபில்?” என்று கேட்டான் அவ்விளைஞன்
“வெயிட், வெயிட், ஐ கம்” என்று சொல்லிக் கொண்டே உள்ளே போய் சாம்பசிவத்திடம் விஷயத்தைச் சொன்னான் கிட்டா.
சாம்பசிவம் திண்ணையைத் தயார் செய்தார். உள்ளே இருந்து இரண்டு நாற்காலிகளைத் தூக்கிப் போட்டார். கீழே ஒரு பாயை விரித்தார். கிட்டா அவர்களை அழைத்து வந்தார்.
வில்லியம்ஸ் மயில்கண் வேஷ்டி கட்டிச் சில்க் ஜிப்பா போட்டிருந்தார்.
“வாங்கோ, வாங்கோ நமஸ்காரம்.” என்றார் சாம்பு.
“நமஸ்காரம்” என்று கைகூப்பினார் வில்லியம்ஸ்.
“கிளேட் டு மீட் யு” என்று கைகுலுக்கினான் இளைஞன். தொடர்ந்து,
“மிஸ்டர் சாம்பசிவம், ஹி லைக்ஸ் யுவர் குக்கிங். ஹி வாண்டட் டு மீட் யு” என்றான் இளைஞன்
சாம்பசிவத்தின் பக்கத்தில் பாயில் அமர்ந்தார் வில்லியம்ஸ். இளைஞன் நின்று கொண்டிருந்தான்.
“ஆமாம் சார், உங்கள் சமையல் எனக்கு ரொம்பவும் பிடித்தது. அதைவிட வீடியோ எடுக்கக்கூடாது என்று சொன்னது மிகவும் பிடித்திருந்தது” என்று தெளிவாகப் பேசினார் வில்லியம்ஸ்.
“எஸ் ஹி பிரைஸ்ட் யு வெரி மச்” என்றான் இளைஞன்
“தம்பி அவருக்குத் தமிழ் தெரியும். நானும் அவரும் தமிழிலேயே பேசிக்கொள்கிறோமே. நீ ஏன் இங்கிலீஷில் பேசிக் கஷ்டப்படுத்தறே!” என்று சொன்னார் சாம்பசிவம்.
”சார், இட் இஸ் நாட்” என்று இழுத்தான் இளைஞன்
“சுகுமார். நீ சும்மா இரு” என்று அவனை அடக்கிவிட்டுச் சாம்பசிவத்தைப் பார்த்து,
“கல்யாணத்திலே என்னாலே உங்களுக்குத் துன்பம். அதற்காக வருத்தப்படுகிறேன்” என்றார் வில்லியம்ஸ்.
“நீங்க அப்படிச் சொல்லப்படாது. பெரிய பெரிய சமையல் செய்யும் போது உங்களை மாதிரி எங்களாலே சுத்தமா இருக்க முடியலே. விறகு, புகை, வியர்வை இதையெல்லாம் தவிர்க்க முடியலே. “

“நீங்க சொன்னதிலே தப்பே இல்லை. நீங்க ஒரு முறை எங்க நாட்டுக்கு வரணும்.”
சாம்பசிவம் மெலிதாகச் சிரித்தார்.
“நீங்க இவ்வளவு அழகாகத் தமிழ் பேசறேளே! எங்கே கத்துண்டேள்?” என்று கேட்டார் சாம்பசிவம்.
“நான் பிறந்தது ஊட்டியிலே. படிச்சதும் அங்கேதான். அதனாலே எனக்குத் தமிழ் தெரியும். அது மட்டுமில்லே. தமிழிலே ஆர்வம் ஏற்பட்டுக் குமரகுருபரம் பிள்ளை என்பவரிடம் மூன்று வருஷம் தமிழ் படித்தேன். அப்புறம் இலண்டனுக்குப் போயிட்டேன். இப்பவும் தமிழ்ப் புஸ்தகங்கள் நிறையப் படிக்கிறேன்” என்றார் வில்லியஸ்.
“உங்க தமிழைக் கேட்டப்புறம் எனக்குத் தமிழ் பேசப் பயமா இருக்கு. அதனாலேதான் இந்தப் பையன் இங்கிலீஷிலே பேசறான் போலிருக்கு”
வில்லியம்ஸ் சிரித்தார்.
எங்க கம்பெனியிலே - இண்ஸ்ட்ருமெண்ட்ஸ்- தமிழ் தெரியலே- ஆங்- கருவிகள் செய்யும் தொழிற்சாலை ஒண்ணு இங்கே ஆரம்பிக்கப்போறோம். நான்தான் அட்வைஸர். ஆலோசனை சொல்றவன். “
“எனக்கு ரொம்பச் சந்தோஷம். இனிமே உங்களை அடிக்கடி பார்க்கலாம்.”
“ஆமாம். உங்க பொண்ணுக்குக் கல்யாணமாமே!”
“ஆமாம்.”
“உங்க உட்பி சன் இன் லா வேலையை விட்டுட்டுராமே?”
“ஆமாம்”
“நீங்க ஒத்துக்கொண்டா அவரை எனக்கு பி ஏ வாகப் போட்டுக்கொள்ளலாமா?”
சாம்பசிவத்துக்கு உண்மையிலேயே கண்கள் பனித்தன. வில்லியம்ஸின் கையைப் பிடித்துக்கொண்டார். அதற்குள் ரமா காபி கொண்டு வந்தாள்.
“ஓ இவள்தான் உங்க பெண்ணா?”
“ஆமாம்.”
“இங்கே வாம்மா” என்று சொல்லி இண்டிமேட் செண்ட் பாட்டில் ஒன்றை எடுத்து அவள் கையில் கொடுத்தார். ரமாவுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை, வில்லியம்ஸின் காலில் விழுந்து வணங்கினாள்.

வில்லியம்ஸ் நெகிழ்ந்து போனார்.
“நன்றாக இரும்மா. நன்றாக இரு. “என்று ஆசீர்வதித்தார்.
”போகலாமா?” என்று கேட்டான் இளைஞன்
“அப்பா, இனிமேல் தமிழ் பிழைச்சுக்கும்” என்று சொல்லிச் சிரித்தார் சாம்பு.
கோபாலின் வேலையைப் பற்றி மனத்தில் அவரை அழுத்திக்கொண்டிருந்த சுமை இறங்கியிருந்தது.
வில்லியம்ஸ் எழுந்தார்.
“கல்யாணத்துக்குப் பத்திரிகை அனுப்பறேன். நீங்க நிச்சயம வரணும்” என்று அழைப்பு விடுத்தார் சாம்பு”
“தங்கை கல்யாணத்தில் அண்ணன் இல்லாமலா?” என்று சொல்லிக்கொண்டே நடந்தார் வில்லியம்ஸ்.
சாம்பசிவத்துக்கும் வில்லியம்ஸுக்கும் என்ன தொடர்பு!. ஒன்றுமே இல்லை. அவருடைய தன்மான உணர்ச்சியும் எவ்வளவு பெரியவர் ஆணையிட்டாலும் தன்னைத் தாழ்த்திக்கொள்ளாத நெஞ்சுரமும் , அவருடைய சுவையான சமையலும் வில்லியம்ஸைக் கவர்ந்தன. உண்மையில் வில்லியம்ஸ் அவருடைய இரசிகனாகவே ஆகிவிட்டார்.
பார்வதியின் உடல்நிலையைப் பற்றி இனிக் கவலைப்படத் தேவையில்லை. தேறிவிடுவாள். ஆனால் கல்யாணச் சத்திரம் பற்றிய கவலை அவரை இன்னும் அரித்துக் கொண்டே யிருந்தது.
வில்லியம்ஸ் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் கல்யாணச் சத்திரத்து மேனேஜர் வந்தார்.
“சாம்பசிவம் சார், இந்தாங்க உங்க அட்வான்ஸ் பணம். “என்று சொல்லிக்கொண்டே பணத்தை நீட்டினார்.
கிட்டாவுக்குக் கோபம் வந்தது.
“சத்திரம் நாங்க புக் பண்ணின பிற்பாடு எப்படி நீங்க அட்வான்ஸைத் திருப்பித்தரலாம். கோர்ட்டிலே கேஸ் போடுவோம்” என்று கத்தினான்.
“கிட்டா அவர் என்ன சொல்ல வருகிறார் என்பதை முழுதும் தெரிந்து கொள்ளாமல் கத்தக் கூடாது. அவர் பக்கத்து நியாயங்களையும் முதலில் கேட்போம்” என்றார் சாம்பசிவம்
”சத்திரத்தை வேறு யாருக்கேனும் அன்னைக்கு விட்டுட்டேளா?” என்று நிதானமாகக் கேட்டார் சாம்பசிவம்.

“இல்லை. சார். இந்தப் பணத்தை வாங்கிக்குங்க சார். ராமசேஷன் சார் தான் இதை உங்களிடம் கொடுக்கச் சொன்னார். அவர்தான் உங்க பொண்ணு கல்யாணம் நடத்தச் சத்திரத்து வாடகை முழுதும் கொடுப்பாராம். உங்ககிட்டப் பணம் வாங்கக் கூடாதென்று சொல்லிவிட்டார்” என்றார் மேனேஜர்.

.

“கிட்டா அவசரப்பட்டு யாரையும் எடை போட்டுவிடக் கூடாது. சில சமயங்களில் தவறாக அனுமானம் செய்து விடுகிறோம். அனுமானம் எப்பொழுதும் ஆபத்தானது” என்றார் சாம்பசிவம்.

இமயத்தின் பனிக்கல்லில் தானே கங்கை பிறக்கிறது.
“மானேஜர், இந்த அட்வான்ஸ் பணத்தை நீங்களே வச்சுங்குங்க. நான் ராமசேஷன் சாரிடம் பேசிக்கிறேன்”
“சார், என்னை மன்னிச்சுடுங்க. ராமசேஷன் சார் என்னைக் கொன்னுடுவார். “என்று சொல்லிக்கொண்டே பணத்தைச் சாம்பசிவம் கையில் திணித்துவிட்டுச் சென்றார்.
எளிதில் உணர்ச்சி வசப்படாத சாம்பசிவம் மனநெகிழ்ச்சியில் உணர்ச்சி வசப்பட்டார். மகிழ்ச்சியா, பெருமிதமா என்னவென்றே தெரியவில்லை. திடீரென எழுந்தார்.
”ரமா பார்வதி , இங்கே வாங்கோ” என்று கத்தினார்.
ரமா ஓடிவந்தாள். பார்வதி மெல்ல நடந்துவந்தாள். கிட்டா ஒன்றும் புரியாமல் அவர் கையைப் பிடித்துக்கொண்டான்.
“கிட்டா உள்ளே போய் நான் காய்கறி நறுக்கிற கத்தியை எடுத்துண்டு வா”
“அப்பா, கத்தி எதுக்குப்பா?” என்று கேட்டாள் ரமா.
“நீ பேசாம இரும்மா. கிட்டா, நான் சொன்னதைச் செய்.”
கிட்டா பயந்துகொண்டே உள்ளே போய்க் கத்தியைக் கொண்டுவந்தான்.
சாம்பசிவம் அதைக் கையில் வாங்கினார்.
“பார்வதி, என் தங்கை மீனாக்ஷி என்னடி சொன்னா? அவன் பையன் அந்தஸ்த்துப் பார்க்கிறான்னு சொன்னாளில்லையா? எனக்குக் கூடச் சமையல்காரன்னா ஒரு படி குறைவோன்னு மனசிலே பட்டுண்டே இருந்ததடி. அது தப்பு. ரொம்பத் தப்பு. இப்போ நான் பெரியவண்டி. ரொம்பப் பெரியவன்.

நான் இனிமேல் நிமிர்ந்து நிப்பேண்டி. ‘‘சொல்லும் போது அவர் நா தழதழத்தது.
‘‘கிட்டா, எழுத்தாளனுக்குப் பேனா மாதிரி சமையல் காரனுக்குக் கத்தியும் கரண்டியும். இந்தா இந்தக் கத்தியைக் கொண்டுபோய் பூஜை அறையிலே வை. அப்படியே ஜாரணியையும் எடுத்துவை.’’ என்று கிட்டாவிடம் கூறினார். கிட்டா அப்படியே செய்தான்
சாம்பசிவம் கண்ணை மூடிக்கொண்டு ஒருசில நிமிடங்கள் தியானத்தில் இருந்தார். பிறகு
‘‘கிட்டா என்னுடைய அடுத்த வேலையிலே நீதாண்டா ஹெட் குக். ‘‘என்றார்.
‘‘மாமா!’’
‘‘ஆமாண்டா’’’’
‘‘மாமா, உங்க தலைமையிலேதான் நான் வேலை செய்யணும்’’
‘‘என்னுடைய அடுத்த வேலை நம்மாத்துக் கல்யாணம்டா. நான் என் பொண்ணு கல்யாணத்திலே பொண்ணுக்குத் தாரை வாத்துக் கொடுப்பேனா, உப்புக்காரம் போடுவேனா?. நீதாண்டா ஹெட் குக், நன்னா சமைக்கணும்டா’’
‘‘உங்க ஆசீர்வாதம் மாமா.’’
’’சாம்பசிவம் சமையலைவிடக் கிட்டா சமையல் நன்றாக இருக்குன்னு எல்லாரும் சொல்லணும்’’
‘‘மாமா, என்னாலே முடியுமா?’’
‘‘ஏன் முடியாது, இந்தா இந்தக் கத்தியையும் கரண்டியையும் பிடி’’ என்று பூஜையறையிலிருந்த கத்தியையும் ஜாரணியையும் எடுத்துக் கொடுத்தார்.
கிட்டா உடல் முழுதும் தரையில் படும்படிக் கீழே விழுந்தான்.
சாம்பசிவம் இமயம் போல் உயர்ந்து நின்றார்.
அந்த இமயத்தை நோக்கி ஒரு நதி ஓடிக்கொண்டிருந்தது.

அத்தியாயம் 8

# மழையோ மழை

இந்த மழைக்குத்தான் எத்தனை வெறி! வானுக்கும் மண்ணுக்கும் என்ன பகை? நீல வானம் கறுத்துக் கீழிறங்கி நீர்த்தாரைகளால் மண்ணைக் குடைந்தது. மேகங்கள் மோதிக் கிழிந்துவிட மின்னல் அவற்றை விரைந்து தைத்தது. சூறைக் காற்றில் கூரைகள் பட்டங்கள் ஆகின. வீதியெல்லாம் வெள்ளக் காடு. மரங்களின் உச்சிகள் தரைவரை குனிந்ததால் வேர்களெல்லாம் விண்ணைப் பார்த்தன. சூரியனுக்கு அன்று சிறுவிடுப்பு. பள்ளம் நோக்கிப் பாய்ந்த வெள்ளத்தில் தண்ணீர் மட்டுமா விழுந்தது. மனிதர்கள் , குடிசைகள், விலங்குகள் , பறவைகள், புல் , பூண்டு, செடிகொடிகள், கட்டில்கள், பீரோக்கள் ... அது ஒரு விசித்திர ஊர்வலம். அங்கே வேகம் வேகம் கண்டது.

பிரளயம் வந்து ஓய்ந்ததோ என ஆடிய மழை அடங்கிய பிறகு, கணக்குப் பார்த்ததில் காணாமல் போனவர் பலர். புதைந்தவை , மிதந்தவை, கடலில் கலந்தவை என்று கணக்குப் போட ஒண்ணாத கால நாடகம் நடந்து முடிந்திருந்தது. இருந்தவர் பலருக்கு இடமில்லை. உண்ண உணவில்லை. உடுக்க உடையில்லை.
பள்ளிக் கூடங்கள் திறந்துவிடப் பட்டன. கல்யாணச் சத்திரங்கள் குடிசைவாசிகளுக்குத் தங்குமிடமாயின. தேர்தலுக்கு இன்னும் ஒரு மாதமே இருந்த நிலையில் இந்த நிகழ்ச்சி அரசியல்வாதிகளுக்கு அல்வா ஆனது ஓட்டுகள் அல்லவா உள்ளே அடங்கியிருந்தன. . வாய்ப்பை நழுவ விட்டுவிடுவார்களா?
ஆடை கொடுத்தது ஒரு கட்சி. மேடை போட்டுத் தான் கொடுப்பதற்கு மேளம் தட்டியது இன்னொரு கட்சி. பள்ளிக் கூடங்கள் திறந்துவிடப் பட்டன. கல்யாணச் சத்திரங்கள் குடிசைவாசிகளுக்குத் தங்குமிடமாயின. ஆளுங்கட்சியின் மாவட்டம் வந்தார்.

தான் மேலே போத்தியிருந்த சால்வையை எடுத்து அங்கே குளிரில் நடுங்கிக்கொண்டிருந்த ஒரு குழந்தைக்குப் போத்தினார். . போட்டோகிராஃபர் புகைப்படம் எடுக்கும் வரை போத்திக்கொண்டே இருந்தார். குழந்தை அழத்தொடங்கியது. அவர் காதில் யாரோ எதுவோ சொன்னார்கள். திரும்பிப் பார்த்தார். வீடியோ வந்தது, போத்தியதை எடுத்து மீண்டும் போர்த்தினார்..
“சார் குழந்தையைக் கொஞ்சம் தூக்கி வச்சுக்குங்க சார்” என்றார் வீடியோ எடுப்பவர். மாவட்டம் குழந்தையைத் தூக்கி வைத்துக்கொண்டார்.
“யோவ், என்னய்யா இவ்வளவு அழுக்கா இருக்கு. சட்டையெல்லாம் அழுக்காயிடுச்சே” என்று முகத்தைச் சுளித்துக்கொண்டார் மாவட்டம்.
“கொஞ்சம் சிரிங்க சார். இப்படியிருந்தாத்தான் அழுக்கையும் பார்க்காமக் குழந்தையைத் தூக்கி வைத்துக்கொண்டார் என்று செய்தி போடலாம்”
“ மாவட்டம் சிரித்தார். நல்ல நடிகர்தாம். இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த வட்டத்தை அழைத்தார்.
“இவங்களுக்கெல்லாம் நமது கட்சிச் செலவில் இரண்டு வேளைச் சாப்பாடு ஏற்பாடு செய்யுங்கள். ஏனோ தானோ என்று இருக்கக்கூடாது” என்றார்.

“மாவட்டத் தலைவர் வாழ்க!” என்று ஒரே கோஷம், வட்டத்தை மாவட்டம் கார்வரை அழைத்துச் சென்று அவருடைய செவியில் ஏதோ மெதுவாகச் சொல்லிவிட்டு , சற்று உரக்க,” இன்னும் தேவையானால் மாவட்டக் கட்சி அலுவலகத்தில் வந்து வாங்கிக் கொள்ளுங்கள்” என்றார் மாவட்டம். வட்டத்தின் விட்டம் சற்று அதிகமாகிவிட்டது. வட்டம் ஒரு தொண்டரை அழைத்துச் சமையலுக்கு ஏற்பாடு செய்வதைப் பற்றி ஆலோசனை நடத்தினார்.
“இந்த வட்டாரத்திலே சமையல் சாம்பசிவம்தான் பேர் பெத்தவரு. அவருட்டே ஒப்படைக்கலாமே!” என்றார் தொண்டர்.
“அட, போய்யா, அவரு சமையலிலே சாம்பாரும் கீம்பாரும்

போட்டுக் கொடுப்பாரு. சாப்பாட்டிலே மசாலா கிசாலா போட்டு ஒரு கிக் இருக்கவேண்டாமா?''
''மசாலா கிசாலா போட்டா தின்னுப்புட்டு எல்லோரும் வவுத்தைப் புடிச்சிக்கிட்டு அங்கன இங்கன அசிங்கப்படுத்திப் புடுவாங்க. பேசாம ஐயரையே கூப்பிட்டுடலாம். ''
''சரி, சரி போய்க் கூட்டியா.''
தொண்டர் விரைந்தார். அப்பொழுது சாம்பசிவம் வீட்டிற்கு அவசரக் கல்யாண ஏற்பாடு வேலை ஒன்றுக்காக ஒரு பெரிய மனிதர் வந்திருந்தார்.
சாம்பசிவத்தின் வீடு சிறியதுதான். அவருடைய பேருக்கும் புகழுக்கும் அவரு எவ்வளவோ சம்பாதித்திருக்கலாம். ஆனால் நியாயமான கூலியே வாங்கிச் சமையல் செய்து வந்ததால் அளவான சம்பாத்தியம். ஆனால் வளமான வாழ்க்கை என்று சொல்லிவிட முடியாது.

வாசலிலே நார்க்கட்டிலிலே அந்தப் பெரிய மனிதர் அமர்ந்திருந்தார். சாம்பசிவத்தின் மனைவி உள்ளே கைவேலையாக இருந்தாள். அவருடைய பெண் ஏதோ ஸ்பெஷல் கிளாஸ் என்று வெளியே போயிருந்தாள்.
''ஏன் ஸ்வாமி, இங்கே இழைக்கோலம் போட்டிருக்கே, என்ன விசேஷம்.'' ''என்று கேட்டார் பெரியவர்.
''என் பொண்ணுக்கு இன்னைக்கு ஜன்மநக்ஷத்திரம். எனக்கு ஒரு வேலையும் இல்லே. அதனாலே இந்த இழைக் கோலத்தை நானே போட்டேன்..
''நீங்களா?''
''ஆமாம். அதிலெல்லாம் எனக்குக் கொஞ்சம் இண்ட்ரெஸ்ட் உண்டு. ''என்றார் சாம்பசிவம்.
''போதுமே உங்கள் பவிஷு. இதையெல்லாம் வந்தவாகிட்டே சொல்லிண்டு..'' உள்ளேயிருந்து குரல்கொடுத்தாள் மாமி.
''பாத்தேளா சுவாமி, அவளுக்கு வர்ற கோபத்தை, அவளுக்கு இழைக்கோலம் போடத் தெரியாதுன்னு நெனச்சிடுவேளோன்னு சந்தேகம். இதிலே எனக்கு அவள்தான் குரு.'' என்றார் சாம்பு.
''எங்காத்துக் கல்யாணத்திலே மாமிதான் இழைக்கோலம் போடணும்.'' என்றார் வந்தவர்.

“அவ வீட்டைவிட்டு வெளியிலே வரமாட்டா. கோயில், குளம்னு போகிறதோடே சரி. மத்தப்படி அவளுக்கு இந்த வீடே கதி. அவ இந்த வீட்டைக் கவனிச்சுக்கிறதாலே தான் நான் என் இஷ்டப்படி வெளியிலே சுத்த முடியுது”

“இந்தாங்கோ ... கொஞ்சம் பாயசம் சாப்பிடுங்கோ. பெண்ணோட பொறந்த நாளோல்லியோ” என்றாள் மாமி.

“நீங்க கொடுக்கறேள். தட்டப்படாது. எனக்கு டயாபட்டீஸ். இருந்தாலும் பரவாயில்லை . சாப்பிட்டுடறேன். வீட்டிலேபோய் கூட ஒரு இஞ்செக்‌ஷன் போட்டுக்கணும். அவ்வளவுதான். . பாயசம் ரொம்பப்பிரமாதம். ஏன் ஸ்வாமி, இதுவும் உங்க கைவண்ணமா?”

“ஏன் வீட்டிலே பொம்மனாட்டிகளுக்குச் சமையல் செய்யவே தெரியாதுன்னு நெனெச்சிட்டேளா?” என்றாள் மாமி

“கோவிச்சுக்காதேங்கோ மாமி. பாயசம் ரொம்ப நன்னாயிருக்கா. அதுனாலே கேட்டேன்”

“சுவாமின், இன்னைக்கு எங்களுக்குள்ளே சண்டை மூட்டிவிடாம நீங்க போகமாட்டீங்கன்னு தெரியுது. நான்தான் முதலிலேயே சொன்னேனே. இங்கே எல்லாம் அவள் பொறுப்புத்தான். நான் சமையல்கட்டுப் பக்கமே போகமாட்டேன். அவளுக்கு எப்பொழுதாவது உடம்பு சரியில்லேன்னா போவேன். எனக்குக் கொஞ்சமா கஞ்சி வைக்கக் கூடத் தெரியாது. “என்றார் சாம்பசிவம்.

“சாம்பு, உங்களுக்கு இவ்வளவு பேரும் புகழும் இருக்கு. ஆனால் உம் திறமைக்கு இது போதாது ஓய். நீர் உம்மைக் கொஞ்சம் விளம்பரப்படுத்திக் கொள்ளணும். ஒண்ணும் இல்லாதவாள்ளாம் சமையல் சக்கரவர்த்தி,, நளபாக சாம்ராட், அறுசுவை அகராதி, அப்படி இப்படின்னு பட்டம் போட்டுக்கறா. பத்திரிகையிலே விளம்பரப் படுத்திக்கறா”

“எனக்கு இதுவே போதும். “சமையல் சாம்புங்கிறதவிட வேறு என்ன பட்டம் வேணும்?”

“மாமா, நீங்க சொல்ற மாதிரியே நானும் அவர்கிட்டச் சொல்லிப் பார்த்துட்டேன். அவர் ஒத்துக்க மாட்டேங்கறார். காலம் இருக்கிற போக்கிலே கொஞ்சங்கூட வளைஞ்சு

கொடுக்க மாட்டேங்கறார். எங்காத்திலேயும் ஒரு போர்டு இருக்கு. அங்கே பாருங்கோ. அதோ அழுக்குப் படிஞ்சிருக்கே, அதுதான். “என்று சொல்லிக்கொண்டே அந்த போர்டைத் துடைத்தாள் மாமி. எழுத்துகள் மங்கலாகத் தெரிந்தன. ’’சிரார்த்த சமையல் இலவசம்’’ என்று அதில் எழுதப்பட்டிருந்தது.

“என் தங்கை ஒரு சமயம் இங்கே பிரசவத்துக்கு வந்திருந்தா. திடீர்னு வலியெடுத்துது. நான் மட்டுந்தான் ஆத்தில் இருந்தேன். வெளியிலே ஒரு ஆட்டோக்காரன் இருந்தான். ஆட்டோவிலே உட்கார வச்சு அவளை ஆஸ்பத்திரிக்குக் கூட்டிண்டு போய் அட்மிட் பண்ணினேன். ஆட்டோக்காரன் வாடகைப்பணம் வாங்கமாட்டேன்னுட்டான். “பிரசவத்துக்கு இலவசமாம்.’’. நானும் அந்த மாதிரி ஏதாவது செய்யலாமென்னு நெனெச்சேன். “எங்க பக்கத்தாத்திலே இரண்டு மாமிகள் கொஞ்சம் கஷ்ட ஜீவனத்தில் இருந்தா. அவாளுக்கும் உதவின மாதிரி இருக்குமேன்னு “சிரார்த்த சமையல் இலவசம்’’ னு போர்டு போட்டேன். யாராவது சிரார்த்தத்துக்குக் கூப்பிட்டா அந்த மாமிகளை அனுப்புவேன். அவா கூலியை நானே கொடுத்திடுவேன் மாமி அவசர அவசரமாக வெளியே வந்தாள்.

“அப்புறம் என்னாச்சுத் தெரியுமோ? அந்த மாமிகள் இவர்கிட்டேயும் பணத்தை வாங்கிண்டு சிரார்த்தம் பண்றவாட்டேயும் பணம் வாங்க ஆரம்பிச்சா. சிரார்த்த சமையல் செய்யற பொம்மனாட்டிகள் இலவசமான்னு கிண்டலடிக்க ஆரம்பிச்சா. எதுக்கு இந்த வம்புன்னு நிறுத்தச் சொல்லிட்டேன்.’’ என்றாள் மாமி

“நல்லது செய்வதற்குக்கூடக் கொடுத்து வச்சிருக்கணும்’’ என்றார் சாம்பு

“நீர் அரசியல்வாதிகளோடே தொடர்பு வச்சிக்கணும். அப்படிச் செஞ்சா உமக்கு வேண்டிய உதவி அரசிட்டேருந்து கிடைக்கும்’’ என்றார் பெரியவர்.

“வேறே வினையே வேண்டாம். நான் அரசியலிலிருந்து ஒதுங்கியே இருக்கேன். அதுதான் நல்லது’’

“அப்படி நீங்க சொல்ல முடியாது ஐயரே’’ என்று ஆளுங்கட்சி அரசியல் தொண்டன் ஆறுமுகசாமி அங்கு

வந்து நின்றான். அவன் எப்பொழுதாவது வந்து கூட்டம் நடத்த நன்கொடை வாங்கிச் செல்வதுண்டு.
" நீ எதுக்கப்பா இங்கே வந்தே. ஏதாவது நன்கொடையா?"
"எங்க வட்டத் தலைவரு உங்களை அவசரமாக் கூட்டியாரச் சொன்னாரு."
"என்ன விசேஷம்"?
"ஒண்ணுமில்லே ஏதோ சமையல் செய்யணுமாம்"
"என்னை விட்டுடப்பா, எனக்கு இந்த அரசியல் விவகாரமே வேண்டாம். அதுவும் உங்க வட்டத் தலைவர் இருக்காரே.."
"அவருக்கென்ன, ஐயரே என்னைப்பத்தி என்ன வேணுமானாலும் சொல்லு. ஆனா எங்க தலைவரைப்பத்தி ஏதுனாச்சும் சொன்னே சீவிப்புடுவேன் சீவி....."
சாம்பசிவம் சிரித்துக்கொண்டே "ஆறுமுகம், சீவறதிலே உங்களைவிட எங்களுக்கு சாமர்த்தியம் அதிகம். எவ்வளவு சீவு சீவுகிறோம் தெரியுமா?"
"என்ன நீ சீவுறியா, எவ்வளவு சீவியிருப்பே?"
"இதுவரை இலட்சத்துக்கும் மேலேயிருக்கும்"
"என்ன சாமி இப்படிச் சொல்லுதீங்க!"
"என்ன, உன் பேச்சே மாறிப்போச்சே. இங்கே பாரு ஆறுமுகம். சீவினது மட்டுமிலே, எத்தனை தோலை உரிச்சிருக்கேன் தெரியுமா? எவ்வளவு வெட்டியிருக்கேன்? எத்தனை உடைச்சிருக்கேன்? எத்தனை எரிச்சிருக்கேன்?""
"ஐயருன்னா பயந்தவருன்னு நெனச்சா இப்படிச் சொல்லுதீகளே?"

சாம்பசிவம் சிரித்துக் கொண்டே" ஆறுமுகம் , நான் சொல்லவந்தது என்னன்னா "ஒவ்வொரு கல்யாணச் சமையலிலும் எத்தனை வாழைக்காயைச் சீவியிருப்பேன். எத்தனை உருளைக்கிழங்கு தோலை உரிச்சிருக்கேன். எத்தனை காய்கறிகளை வெட்டியிருக்கேன். எத்தனை தேங்காய்களை உடைச்சிருக்கேன். எத்தனை விறகுகளை எரிச்சிருக்கேன்" என்றார்
"அப்படியா, ஐயரே , நீ பெரியாளுதான். உடனே கிளம்பி தலைவரைப் பார்க்க வா"
"எதுக்காக என்னை வரசொல்றாரு"

“சமையல் செய்யத்தான். மழையிலே ஏழைகளெல்லாம் கஷ்டப் படறாங்கல்லியா? அவங்களுக்கு எங்க கட்சியிலேருந்து சாப்பாடு போடப்போறாங்க. நீதான் சமையல் செய்யணும்னு தலைவர் சொல்லுதாரு.”

“சாம்பசிவம், நல்லது செய்யறதுக்கும் கொடுத்து வச்சிருக்கணும்னு இப்பத்தானே சொன்னீர். ஏழைகளுக்குச் சமையல் பண்ணிக் கொடுக்கிறதும் ஒரு நல்ல காரியந்தானே! பேசாமப் போயிட்டு வாரும்” என்றார் பெரியவர்.

அத்தியாயம் 9

# அரசியல் அதர்மம்

“வாயா ஐயரே, ஏன் கூட்டியாரச் சொன்னேன்னு ஆறுமுக சாமி சொன்னானா?” என்று கேட்டார் வட்டம்
“சொன்னான். ஏதோ சமையல் பண்ணனும்னு சொன்னான்”
“ஏதோ சமையலில்லை. நிறையச் சமையல். மழையிலே வீடெல்லாம் இடிஞ்சுபோய் பள்ளிக் கூடங்களிலேயும் கல்யாண மண்டபத்திலேயும் தங்கி யிருக்கிறவங்களுக்குப் புளிஞ்சோறும் தயிர்சோறும் பொட்டணம் போட்டுக் கொடுக்கணும். பத்தாயிரம் பாக்கட்.”

“நல்ல காரியந்தான் . செய்ய வேண்டியதுதான். ஏழைங்களெல்லாம் உங்களை வாழ்த்துவா!
“என்னை வாழ்த்தினாப் போதாது. எங்க கட்சியை அவங்க ஆதரிக்கணும். உன் சாப்பாடு நினைவிலே நிக்கற மாதிரியிருக்கணும்.”
“செஞ்சுடலாம். நீங்க சாமான் வாங்கிக் கொடுங்கோ. மத்ததை நான் பார்த்துக்கறேன்”
“சாமான் உட்பட மொத்தமா பேசிக்கலாம். நீங்களெல்லாம் இங்கே இருங்கப்பா. நான் ஐயரை உள்ளே கூட்டிக்கிட்டுப் போய் பேசிட்டு வாரேன். இங்கே பேசினா சங்கோசப் படுவாரு.” என்று சொல்லிக் கொண்டே சாம்பசிவத்தை வீட்டிற்குள் கூட்டிச் சென்றார்.
“ஐயரே நீ என்ன கேக்குற சொல்லு”
“விநியோகம் நீங்க ஆளைவச்சுப் பார்த்துப்பீங்களா அல்லது அதையும் நாங்கதான் செய்யணுமா?”
“எத்தனை தடவை சொல்லுறது. எல்லாம் நீதான் பாத்துக்கணும்னு சொன்னேனில்லையா?”
“சரி, ஒரு பாக்கட்டுக்கு 15 ரூபாய் ஆகும். ஒரு செட்டுக்கு 30 ரூபாய். 20 ஆயிரம் பாக்கட்டுக்கு 3 லட்சம் ரூபாய் ஆகும்”
“இங்கே பாரு ஐயரே ஒரு பாக்கட்டுக்கு 30 ருபாய் தரேன். ஒரு செட்டுக்கு 60 ரூபாய். பாதி உனக்கு பாதி எனக்கு.6 லட்சம் ரூபாய்க்கு இரசீது கொடுக்கணும்”

“இதெல்லாம் எனக்குப் பழக்கமில்லே”
“என்னய்யா, கைபடாத கன்னிப் பொண்ணு மாதிரி சிலுத்துக்கிறே.”
“இங்கே பாருங்கோ, எனக்குப் பொட்டலத்துக்குப் பதினைந்து கொடுத்திருங்கோ. விநியோகத்துக்கு ஆள்போட்டுச் செய்ய 3000 ரூபாய் ஆகும். அதை நானே போட்டுக்கிறேன். “
” ஏன் நீ தேர்தலுக்கு நிக்கப்போறியா?’
“ஏழைகளுக்கு என் கைங்கர்யமா இருக்கட்டுமே!”
“நீ என்ன ஐயரே ஒண்ணுமே தெரியாத ஆளாயிருக்கியே! ஏழையாம், கைங்கர்யமாம். அடுப்படியைத் தவிர வேறு உலகமே கிடையாதா?”என்று சொல்லி வட்டம் சிரித்தார்.
“தலைவருக்கு வயசு என்ன இருக்கும்?”
“நீ யாரு வயசைக் கேக்கிறே என் வயசையா, அல்லது என் தலைவர் வயசையா?
“உங்க வயசைத்தான்”
“ஏன், இன்னும் இளமையா இருக்கேனேன்னு பாக்கிறியா? ஏதோ கொஞ்சம் வழுக்கை,லேசா நரைச்சுப் போச்சு. அவ்வளவுதான். ஐயரே அதிலெல்லாம் நான் கில்லாடியாக்கும். “கண்ணடித்துக்கொண்டே சிரித்தார் வட்டம். வயசு நாப்பதுதான் ஆகுது. ஆமாம் எதுக்காக என் வயசைக் கேக்குறே?’
“எனக்கு ஐம்பத்தெட்டு ஆகுது. வயசுக்காவது மதிப்புத்தந்து கொஞ்சம் மரியாதையாப் பேசலாம் இல்லியா?”
“யோவ், ஐயரே, உங்க புத்தியைக் காட்டாம விடமாட்டீங்க போலிருக்கே. இன்னும் உங்களுக்கு அடங்கிப் போவோம்னு நினைச்சீங்களா? உங்க பாட்டன் முப்பாட்டன்லாம் வயசுக்கு மதிப்புக் கொடுத்தாங்களா?. நான் ஏன் உனக்கு மதிப்புக் கொடுக்கணும்?. . இப்போ நாங்கள்ளாம் முழுச்சிக்கிட்டோம் தெரியுமில்லே.”
”ஐயய்யோ நீங்க தப்பா நினைக்காதேங்கோ. நான் என்ன செய்யணும்னு சொல்லுங்கோ.”
“ஒட்டு மொத்தமா என்ன வேணுமின்னு சொல்லு. நீ கேக்கறதிலே உனக்குப் பாதி, எனக்குப் பாதி.”

"எனக்கு அப்படியெல்லாம் வேண்டாம். எனக்கு மூன்று லட்சம் கொடுத்திருங்கோ. இதிலே எனக்கு லாபமில்லே. அடக்கத்தைத்தான் சொல்றேன். நன்னாப் பண்ணித்தாரேன்"
"வெவரங்கெட்ட மனுசனாய் இருக்கியே அய்யரே! பாக்கட்டுக்கு 30 ரூபாய் தாரேன்"
"ஈஸ்வரா இது என்ன சோதனை. எனக்குப் பாக்கட்டுக்குப் பதினைந்து ரூபாய் மட்டும் போதும். இரசீதும் அந்தத்தொகைக்குத்தான் தருவேன்."
"சரி, சரி, நான் ஏற்கனவே சொன்னேனே, நீ கன்னி கழியாத பொண்ணு மாதிரி. கொஞ்சம் வசங்குற வரைக்கும் முரண்டு பிடிப்பே. சரி, சரி நான் இரசீது வேறு யாரிட்டாயாவது வாங்கிக்கிறேன். இரசீதுக்குப் பொட்டலத்துக்கு ஒரு ரூபாய் கொடுக்கவேண்டியிருக்கும். அந்த ரூபாயை நீதான் கொடுக்கணும்"
"சரி, 14 ரூபாய் கொடுங்கோ போதும். "
"ஆனா ஒண்ணு. யாரு கேட்டாலும் பாக்கெட்டுக்கு முப்பது வாங்கிட்டதாகச் சொல்லணும். சரியா?"
"தப்பில்லையா?
"தப்பு ரைட்டுப் பத்தியெல்லாம் பேசக் கூடாது. சொல்லுவியா?"
"உரலுக்குள்ளே தலையைக் கொடுத்தச்சு. உலக்கைக்கு அஞ்சினா நடக்குமா" என்று வாய்க்குள் முணுணுத்துக் கொண்டார்.
"ஐயரே, உரலுக்குள்ளை தலையைக் கொடுத்தாச்சுன்னு தானே முணுமுணுக்குறே. நான் சொல்றதுக்கு ஒத்துக்கிட்டா நல்லது. இல்லைன்னா உரலுக்குள்ளே அடிக்கடி தலையைக் கொடுக்கவேண்டியிருக்கும்."
"நான் ரேட்டைப் பத்தி வாயே திறக்கமாட்டேன் போதுமா?""
"அது போதும். வாயைத்திறந்தா உரலுதான். ஞாபகமிருக்கட்டும். என்னைப்பத்திக் கேள்விப் பட்டிருப்பியே! சரி வெளியே வாரும்"

இருவரும் வெளியே வந்தார்கள்.
எல்லார் முன்னாலேயும்" ஐயரு ஒரு பாக்கட்டுக்கு 30 ரூபாய், ஒரு செட்டுக்கு 60 ரூபாய் கேக்கறாரு. அவரு தாராளமாப் பொட்டலம் போட்டுத் தருவதாகச்

சொல்லியிருக்காரு. ஐயரே , இந்தா 3 லட்ச ரூபாய் அட்வான்ஸா தாரேன். மிச்சத்தை வேலையெல்லாம் முடிந்த பிறகு தரேன்'' என்று சொல்லி மூன்று இலட்சத்துக்குக் காசோலை கொடுத்தார். கையெழுத்து வாங்கினார். ஒரு தொண்டர் சாட்சிக் கையெழுத்துப் போட்டார்.

''ஏ, ஆறுமுக சாமி, ஐயரை வீட்டிலே விட்டுட்டு வா'' என்றார் வட்டம்.

சாம்பசிவம் மெதுவாக நடந்தார். அவரது மன வேதனையால் அவரால் வேகமாக நடக்க இயலவில்லை. வட்டம் அவரது தொண்டர்களிடம் சொல்லிக்கொண்டிருந்தது அவரது காதில் விழுந்தது.

''பாத்தீங்களாய்யா. நல்லாச் சமைப்பாரேன்னு ஐயரிடம் வேலையைக் கொடுத்தா இரண்டு பாக்கட்டுக்கு 80 ரூபாய் கேக்கறான். . நான் தான் மிரட்டி 60 ரூபாய்க்கு ஒத்துக்க வச்சேன். ''

அத்தியாயம் 10

# ஏழைகள் வாழ்த்தினார்கள்

வாங்கின காசுக்கு வஞ்சகமில்லாமல் புளியோதரையும் தயிர்சாதமும் சமைத்துப் பொட்டலம் போட்டு வைத்தார் சாம்பசிவம். சாப்பிடப் போகிறவர்கள் ஏழைகள் என்ற காரணத்தால் செலவைக் கருதாமல் மிகச் சிறப்பாகச் சமைத்திருந்தார். முந்திரி , வேர்க்கடலை கூடச் சேர்த்திருந்தார். தான் எதிர்பார்த்ததை விட அதிகம் செலவானாலும் அவர் கவலைப்படவில்லை. . விநியோகம் செய்கிற பொறுப்பைக் கோபாலிடம் ஒப்படைத்திருந்தார். கோபால் படித்தவன். கொடுத்த வேலையை ஒழுங்காகச் செய்வான் என்பது அவரது நம்பிக்கை. 300 பொட்டலங்கள் அதிகமாகவே கொடுத்திருந்தார்.

கோபால் நல்ல முறையில் ஏற்பாடு செய்திருந்தான். . மக்களைச் சமாளிப்பதில் சிரமமில்லை. ஆனால் கட்சித் தொண்டர்களைச் சமாளிப்பது சிரமமாகப் போய்விட்டது. தலைவருக்கு டேஸ்ட் பண்ணனுமாம் என்று சொல்லிக் கேட்காமலே 10 பொட்டலங்களை எடுத்துச் சென்றான் ஒரு தொண்டன். கட்சியின் சின்னத்தைச் சட்டையில் அணிந்தவனெல்லாம் தன்னைத் தொண்டனென்று சொல்லிக் கொண்டான்.

“யோவ், நீ என்ன கொடுத்தவனுக்கே கொடுக்கிறே. இவங்களுக்குக் கொடு” என்று தனக்கு வேண்டப்பட்டவருக்கு மீண்டும் மீண்டும் கொடுக்கச் சொன்னார் ஒரு தொண்டர்.

“இவாளுக்கெல்லாம் குடுத்தாச்சே” என்றான் கோபால்.

“இங்கே பாரு குட்டி ஐயரே, நீ எதுனாச்சும் சொன்னே நீ பத்தாயிரம் செட்டுக் கொண்டுவரலே. குறைச்சுத்தான் கொண்டுவந்தேன்னு தலைவரிடம் போட்டுக் கொடுத்திடுவேன்” என்று மிரட்டினார்

“300 செட்டு அதிகமாகக் கொண்டு வந்தேன்” என்றான் கோபால்.

”பின்னே நீ குண்டக்க மண்டக்கான்னு கேள்வி கேட்டா நான் அப்படித்தான் சொல்வேன்” என்றார் அந்தத் தொண்டர். அதற்குள் கொஞ்சம் ஆங்கிலம் படித்த ஒரு கட்சித் தொண்டர் தனது ஆங்கில அறிவைக் காட்ட

“யுவர் ஃபுட் இஸ் நாட் டேஸ்ட்டி. பூர் க்வாலிட்டி. ஐ வில் ரிப்போர்ட். கிவ் மி டூ பாக்கட்ஸ்” என்றான்

“இஃப் அவர் ஃபூட் இஸ் நாட் குட் ஒய் டு யு ஆஸ்க்ஃபார் இட். ஐ வில் நாட் கிவ் யு. கோ அண்ட் கம்ப்ளைன் .” என்றான் கோபால்.

கோபாலின் ஆங்கிலத்தைக் கேட்டுவிட்டு அவன் அங்கிருந்து நகர்ந்தான்.

“நல்ல சூடு கொடுத்தே தம்பி. சாப்பாடு என்ன பிரமாதமா இருக்கு. பொடிப்பய உளறிட்டுப் போறான்” என்றார் கூட்டத்தில் ஒருவர்.

பெரியவர்கள் பொட்டலத்தை வாங்கிச்சென்று உண்டார்கள். கைக்குழந்தைகள் அழுதன. அவை புளியோதரையையா சாப்பிட முடியும். இதை எதிர்பார்த்துக் கிட்டாவை அனுப்பி ஐந்து லிட்டர் பசும்பால் வாங்கிவரச்சொல்லிக் காய்ச்சிச் சர்க்கரை போட்டு வைத்திருக்கச் சொன்னார் சாம்பு. குழந்தைகளுக்குப் பாலைக் காகித டம்ளரில் கொடுக்கச் சொன்னார். இந்த அன்பைப் பார்த்த தாய்மார்களுக்குக் கண்கள் பனித்தன.

“நீங்க நல்லாயிருக்கணும்” என்று வாழ்த்தினார்கள் பெரிய மனிதர்களிடமிருந்து கிடைக்கிற வாழ்த்தைவிட அந்தப் பாமர மக்களின் வாழ்த்தை அவர் பெரிதும் மதித்தார். அவர்களுடைய வாழ்த்து எதையும் எதிர்பார்க்காத வாழ்த்து. கள்ளங்கபடமின்றி வருகின்ற வாழ்த்து. அவர்களுடைய வாழ்த்து வலுவுடையதாக இருந்து, தனது காணாமல் போன மகனைக் கண்முன் கொண்டுவராதா என நினைத்தார். அவர் மனம் பின்னோக்கிச் சென்றது.

பதினைந்து ஆண்டுகட்கு முன்பு. அவர் சமையல் கலையில் பிரபலமாகத் தொடங்கியிருந்த சமயம். அவரது பையன் இராமரத்னம் பி.யு.சி தேர்வில் நல்ல மதிப்பெண் பெற்றிருந்தான். என்றாலும் அவனுக்கு இஞ்சினீயரிங் கல்லூரியில் இடங்கிடைக்கவில்லை. ஐம்பதாயிரம் நன்கொடை கேட்டார்கள். பணம் கட்ட வசதியில்லை.

ஆங்கில இலக்கியம் அல்லது பொருளாதாரம் படிக்கச் சொன்னார்கள். அவனுக்கு அதில் விருப்பமில்லை. தந்தை நினைத்திருந்தால் பணம் புரட்டியிருக்க முடியும் அல்லது சிபாரிசு பிடித்திருக்க முடியும் என்று அவன் நம்பினான். எனவே தந்தையின்மேல் கோபம் வந்தது. ஒருநாள் சொல்லிக் கொள்ளாமல் வீட்டை விட்டு ப் போய்விட்டான். எங்குத் தேடியும் கிடைக்கவில்லை. இருக்கிறானா இல்லையா என்பது கூடத் தெரியவில்லை. அவர் ஒரு வழியாக மனத்தைத் தேற்றிக் கொண்டார். அவன் காணாமல் போனபோது ரமாவுக்கு 5 வயது. அவளுக்கு அவளது அண்ணன் முகம் சரியாக நினைவில்லை. அவரது மனைவிக்குத்தான் மகனைப் பற்றிய ஏக்கம் தீரவில்லை. அடிக்கடி நினைத்துக் கொண்டு அழுவாள். . அவன் நினைவு வரக்கூடா தென்பதற்காகவே அவனைப் பற்றிப் பேசுவதே இல்லை. ஆனால் அவனது ஜன்ம நட்சத்திரத்தன்று அவன் நினைவாக மாரியம்மன் கோயிலில் கூழ்காய்ச்சி விநியோகிப்பார்கள்.

சிந்தனையிலிருந்து விடுபட்டார் சாம்பசிவம். அவரது கண்கள் பனித்திருந்தன. அந்த எளிய மக்களின் வாழ்த்து அவருக்கு ஓரளவு மனத்தெம்பு தந்திருந்தது. . அந்தச் சமயத்தில் யாரோ பெரியவர் அந்த ஏழை மக்களுக்காகப் போர்வைகள் அனுப்பியிருந்தார். எதற்கெடுத்தாலும் விளம்பரப் படுத்திக் கொள்ளும் இந்நாளில் அனுப்பியவர் யார் என்பதைக் கூட வந்தவர் சொல்லவில்லை. வட நாட்டுக் காரர் என்று சொன்னார்கள். அந்தப் போர்வைகளைக் கொண்டுவந்தவர் அப்போர்வைகளை அங்குள்ள ஏழைகளுக்குக் கொடுக்கும் படி சாம்பசிவத்தை வேண்டினார்.

“நானா, வேண்டாம் நீங்களே கொடுத்திடுங்கோ?”

“உங்க ஆள்கள் பொட்டலம் விநியோகம் பண்ணின நேர்த்தியைப் பார்த்தேன். அவர்களையே இதையும் கொடுக்கச் சொல்லுங்கள்” என்றார் அவர்.

அப்பொழுது ஆளுங்கட்சித் தொண்டர் ஒருவர்” எங்கள் வட்டத் தலைவர் அனுமதியில்லாமல் இங்கே யாரும் எதையும் கொடுக்கக்கூடாது “ என்றார்

பொதுவாகக் கோபம் வராத சாம்பவசிவத்திற்கே கோபம் வந்துவிட்டது.

''ஏண்டா கொடுக்கக் கூடாது?'' என்று கத்தினார்.

“எங்க கட்சித் தலைவர் படத்தைப் போட்டுத்தான் கொடுக்கணும்''

“இது உங்க கட்சி கொடுப்பதில்லை''

“இந்தக் கல்யாண மண்டபத்திலே இவங்களைத் தங்க வச்சிருப்பது எங்க கட்சி. ஞாபகம் இருக்கட்டும். வேறு யாராவது கொடுக்கணுமானா இவங்களை உங்க வீட்டுக்குக் கூட்டிக்கிட்டுப் போய் கொடுங்க!'' என்றார் தொண்டர். அந்த நேரம் அந்தக் கல்யாண மண்டபத்தின் சொந்தக் காரர் அங்கே வந்தார்.

நடந்ததைப் பார்த்த அவர்'' இது என்னுடைய கல்யாண மண்டபம். இங்கே நான்தான் இடம் கொடுத்திருக்கேன். நீங்க கொடுங்க சாமி'' என்றார் அவர்.

“ஐயா இந்த விவகாரமே நமக்கு வேண்டாம். நீங்களே கொடுங்கோ. ஒரு நல்லது செய்வதற்குக்கூட எவ்வளவு சங்கடங்கள்'' என்று சொல்லிக் கொண்டே சாம்பசிவம் அங்கிருந்து அகன்றார்.

இதையெல்லாம் மறைந்திருந்து வீடியோ எடுத்த எதிர்க்கட்சித் தொலைக்காட்சியைச் சேர்ந்த வீடியோக்காரரின் படத்தை அந்தத் தொலைக்காட்சி அன்று மாலை ஒளிபரப்பியது. அதைப் பார்த்த ஆளுங்கட்சிக் காரர்களுக்குச் சாம்பசிவம் மீது கோபம் வந்தது. எதிர்க்கட்சிக்காரர்கள் நடத்தும் பத்திரிகைகளில் சாம்ப சிவத்தின் படத்தைப்போட்டு “ ஆளுங்கட்சியின் அட்டூழியம் “ என்று தலைப்பிட்டுச் செய்தி வெளியிட்டிருந்தார்கள்.. தன் வேலையுண்டு தானுண்டு என்றிருந்த சாம்பசிவம் ஒரு அரசியல்வாதிக்குச் சமையல் செய்து கொடுத்ததனால் சிக்கலில் மாட்டிக்கொண்டார். பத்திரிகை நிருபர்கள் அவர் வீட்டைப் படம் எடுத்தனர். “எவ்வளவு பணம் கொடுத்தார்கள். முழுப்பணமும் வந்ததா'' என்று குடைந்தெடுத்துவிட்டார்கள்.. சாம்பசிவம் மிகச் சாமர்த்தியமாகப் பதில் சொன்னார்

“எங்கள் தொழில் தர்மம் வேலை செய்யப்போகிற இடத்திலே யாரிடம் எவ்வளவு வாங்கினோம் என்பதை

வெளியில் சொல்வதில்லை. என் வேலைக்குக் கூலியை கொடுத்துவிட்டார்கள். அவ்வளவுதான்'' என்று சொன்னார். அந்தப் பேட்டியைப் பார்த்த வட்டத்திற்குக் கொஞ்சம் நிம்மதியாயிற்று. ''ஐயரு நல்லவர்தாம்பா'': என்று ஒரு தொண்டனிடம் கூறினார்.

ஆனால் எதிர்க்கட்சிக்காரர்கள் அவரை விடுவதாக இல்லை. இன்னும் மழையினுடைய பாதிப்புத் தீரவில்லையாதலால் அவர்களும் ஏழைகளுக்கு உணவுப் பொட்டலம் வழங்க முன்வந்தார்கள். சாம்பசிவம் ஆளுங்கட்சிக்காரர்களுக்குச் சிறப்பாகச் சமையல் செய்து கொடுத்தார் என்பதை அறிந்த அவர்கள் தங்களுக்கும் 10000 செட் தயார் செய்து கொடுக்கச் சொன்னார்கள். ஆளுங்கட்சி வட்டத்திடம் எவ்வளவு பணம் வாங்கினார் என்பதைச் சொல்ல மறுத்துவிட்டார். இங்கேயும் பண பேரம் நடந்தது. அவர்கள் கொடுத்ததை விட அதிகமாக ஒரு வடையும் கொடுக்க வேண்டும் என்றார்கள்.

''நான் செய்து கொடுக்கிறேன். ஒரு வடைக்கு அதிகமாக எட்டு ரூபாய் கொடுங்கள் . பெரிதாகவே போட்டுத்தருகிறேன். சட்டினியும் கொடுக்கிறேன்'' என்றார் சாம்பசிவம். ஆனால் விநியோகம் செய்யும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டார். எதிர்க்கட்சிக் காரர்கள் பாராட்டும் படியாக மிகச் சிறப்பாகச் செய்து கொடுத்தார். முன்பு செய்தது போலவே தமது சொந்தப்பொறுப்பில் குழந்தைகளுக்கென்று தனியாக ஐந்து லிட்டர் பால் காய்ச்சி சர்க்கரை போட்டுக் கொடுத்தார்.

எதிர்க் கட்சிக்காரர்கள் கொடுத்த சாப்பாட்டை ஏழைகள் மிகவும் பாராட்டியதை அறிந்த ஆளுங்கட்சி வட்டம் சாம்பசிவத்தின் வீட்டிற்கே சென்று அவரைத் திட்டத் தொடங்கினார்

''ஐயரே எங்களுக்குக் கொடுத்ததை விட அதிகமாக வடையெல்லாம் கொடுத்தியாமே. எவ்வளவு வாங்கினே'' என்று கேட்டார்.

''நீங்கள் எவ்வளவு கொடுத்தீர்கள் என்று அவர்களிடம் நான் சொல்லவில்லை. அவர்கள் எவ்வளவு கொடுத்தார்கள் என்று உங்களிடமும் சொல்லப்போவதில்லை.. அது எங்கள் தொழில் தர்மம்'' என்றார் சாம்பசிவம்

“ஐயரே, கொஞ்ச காலத்திலே அரசியல் கத்துக்கிட்டே போலிருக்கே. . பேசாம எங்க கட்சியில் சேர்ந்துடு ஐயரே. உனக்கு நல்ல வரும்படி கிடைக்கும்.”

“ஆளை விடுங்க அய்யா. எனக்கு இந்த அரசியலே வேண்டாம்”

“ஏன் அரசியல் மோசம்னு சொல்லுதியா?”

“அப்படிச் சொல்லலே. அதுக்குத் தனிச் சாமர்த்தியம் வேணும். அது எங்கிட்டே கிடையாது” என்றார் சாம்பசிவம்.

அந்த நேரம் பார்த்து அங்கே வீடியோ கேமிராவோடு வில்லியம்ஸ் வந்தார்.

வீடியோ கேமராவோடு ஒரு வெளிநாட்டுக்காரர் வருவதைப் பார்த்த வட்டம் எதற்கு வம்பு என்று அங்கிருந்து நகர்ந்தார்.

அத்தியாயம் 11

# எவ்வளவு சுருட்டலாம்

யார் யாரெல்லாமோ மழையினால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவுகிறார்கள். நாமும் நமது பரிசாரகர் சங்கத்தின் மூலம் ஏதாவது உதவி செய்யலாமே என்று சாம்பசிவம் நினைத்தார். கோபாலை அழைத்துக்கொண்டு பரிசாரகர் சங்க அலுவலகம் நோக்கிச் சென்றார். அதே சமயம் பரிசாரகர் சங்கச் செயற்குழுக்கூட்டம் சங்கத்தில் நடந்துகொண்டிருந்தது. அந்தக் கூட்டத்தில் சாம்பசிவத்தைப் பற்றித்தான் விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அவருடைய பேட்டி தொலைக்காட்சியிலும் பத்திரிகைகளிலும் வந்ததானது பலருக்குப் பொறாமையைத் தூண்டிவிட்டிருந்தது.

“என்ன இருந்தாலும் சாம்பு பண்றது நல்லா இல்லே ஓய்” என்றார் சுப்ரமணிய அய்யர்.

“ஏன், அவர் நன்னாத்தானே சமையல் பண்றார்” என்று இடைமறித்தார் குப்புசாமி.

“கிண்டலடிக்கிறதா நெனச்சிண்டு ஏதாவது சொல்லாதேயும். அவர் நம்ம எல்லாரையும் விட ரேட் குறைவா வாங்குறார். அதனாலே அவருக்குக் கல்யாண ஆர்டர் நெறயக் கிடைக்குது.” என்றார் சுப்ரமணிய அய்யர்.

“சுப்ரமணிய அய்யர்னு பேர் வச்சுண்டா நீரென்ன சீவலப்பேரி சுப்ரமணிய அய்யர்னு நெனச்சுட்டீரோ. அவருக்குப்பறம் எங்க மாமா தான் எல்லாரையும் விட டாப் தெரியுமோ?” என்றான் பட்டா. அவனும் அங்கே ஒரு செயற்குழு உறுப்பினர்.

“நான் ரேட்டைப் பற்றிச் சொன்னா நீ எதையோ சொல்றியே!”

“இங்கே பாருங்கோ உங்களையெல்லாம் விட ரேட் அவர் குறைவா வாங்கினாலும் அவர்ட்ட வேலை செய்யறவாள்ளுக்கு நீங்க கொடுக்கறதை விட அதிகம் கொடுக்கிறார் தெரியுமோ?” என்றான் பட்டா

“அப்படியா” வியந்தார் அய்யாவய்யர்.

" ஆமாம் நம்ம சங்கத்திலே குறைந்த பட்சக் கூலி 100 ரூபாய் வச்சிருக்கோம். அவர் 120 ரூபாய் கொடுக்கிறார். நீங்களெல்லாம் நெறைய வாங்கிண்டு 50% கமிஷன் அடிக்கிறேள். "

"ஏ பட்டா, வாய்க்கு வந்த படி பேசாதே. நாங்க என்ன வாங்கினாலும் குறைந்த பட்சச் சம்பளத்தைக் கொடுக்கிறோமா இல்லையா?" என்றார் சங்கத் தலைவர் சாமிநாத அய்யர்.

உண்மையிலேயே அவர்தான் அதிகக் கமிஷன் அடிப்பவர்.

"அது கிடக்கட்டும். என்னமோ மாரியம்மன் கோவிலிலே போய் கூழ் காய்ச்சி ஊத்தறாராமே இதையெல்லாம் நம்மடவா செய்யலாமோ? அதுக்குத்தான் தவசிப்பிள்ளைகள் இருக்காளே! "என்று அங்கலாய்த்தார் அண்ணாசாமி.

"கூழ்காய்ச்சி விடற வேலையை ஒண்ணும் அவர் ஒத்துக்கலே. அவரேதான் தன் காணாமல் போன மகன் திரும்பக் கிடைக்கணும்னு வேண்டிண்டு கூழ் காய்ச்சி விட்டார். அந்த வேலையை அவரே செஞ்சார். அதிலென்ன தப்பு? சாமி காரியத்திலே உயர்ந்தது தாழ்ந்ததெல்லாம் கிடையாது தெரியுமோ?" என்றான் பட்டா

"அபச்சாரம். அபச்சாரம். அங்கெல்லாம் கிடாவெட்டு நடக்குது தெரியுமோ? அங்கேயெல்லாம் நாம் போகலாமோ?" என்றார் நாணுவையர்.

"அதெல்லாம் அந்தக்காலம். ஆமாம் நம்ம தலைவர் அவருடைய குலதெய்வம் கோயிலுக்குக் கிடா நேர்ந்து விட்டிருக்காராம் தெரியுமோ" என்றான் பட்டா.

"வாஸ்தவந்தான், அது சாமி காரியம். எங்க குலதெய்வம் கிராம தேவதை. அதனாலே நேர்ந்து விட்டிருக்கேன். இதெல்லாம் பெரியவர்களாப் பார்த்து ஏற்பாடு பண்ணுனது. " என்றார் தலைவர்.

பெரியவர்கள் ஏற்பாடு பண்ணினதெல்லாமும் உத்மமில்லை. பின்னாலே செய்யறதெல்லாமும் மோசமுமில்லே." என்று பதிலடி கொடுத்தான் பட்டா.

"பிராமணாள் கடா வெட்டலாமோ?

"அந்தணன் என்பான் அறவோன் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்" என்று வள்ளுவர்

சொல்லியிருக்கார் தெரியுமோ'' என்று தமிழ்ப் படித்த சதாசிவமய்யர் கூறினார்.
"ஓய், நீர் ஒழுங்கா சந்தியாவந்தனம் பண்றீரா? நீர்போய் என்னவெல்லாமோ பேசறீரே'' என்று கேட்டார் வீரு வாத்தியார்.
அப்பொழுது அங்கே கோபால் பின்தொடர சாம்பசிவம் வந்தார்.
"வாங்கோ வாங்கோ, என்ன பெரியவாள் இவ்வளவு தூரம்?'' என்று கேட்டார் தலைவர்.
"ஏதோ கூட்டம் நடக்கறாப்போல இருக்கு?''
"ஆமாம் செயற்குழுக் கூட்டம் நடக்குது'' என்றார் தலைவர்.
"சரியான சமயத்திலேதான் வந்திருக்கேன். நம்ம சங்கத்தின் மூலமா, மழையாலே பாதிக்கப்பட்டவாளுக்கு ஏதாவது செய்யணும்னு தோணுது. அதைப்பத்திப் பேசத்தான் வந்தேன்'' என்றார் சாம்பசிவம்.
"அதெல்லாம் நாம் ஏன் செய்யணும். அதுதான் அரசாங்கமே செய்யுதே! அதுலே உமக்குக்கூட யோகம் அடிச்சாப்போல இருக்கே!. அரசங்கத்தை விடவா நாம் பெரியவா?"'' என்றார் தலைவர்.
"ஏதோ நான் பெரிசா இலாபம் அடைஞ்சதாப் பேசறீங்களே. என் கைக்காசு போனதுதான் மிச்சம். சரி சரி அதைப்பத்திப் பேச்செதற்கு? எல்லாம் அரசாங்கமே செய்யணும்னு எதிர்பார்க்க முடியுமா? "
'' அதுக்கெல்லாம்தான் கட்சிக்காரா இருக்காளே? நீர் கூடப் பொட்டலம் கட்டிக் கொடுத்தீராமே. நாம என்ன ஓட்டுக்கேட்கவா போறோம்'' என்றார் சீதாராமய்யர்
"சும்மாவா கட்டிக்கொடுத்தார். நெறயவே வாங்கிண்டார்னு கேள்வி'' என்றார் தலைவர்
"உங்களுக்கெல்லாம் ஒருதடவை சொன்னாப் புரியாது. சரி சங்கத்திலேருந்து எதாவது செய்ய முடியுமா முடியாதா?''
"நாமேன் செய்யணுங்கறேன்?''
"நமக்குப் படியளக்கிற சமுதாயத்துக்கு நாம ஏதாவது செய்ய வேண்டாமா?
''முன்னாலே மாதிரி இப்போல்லாம் அவ்வளவு வருமானம் இல்லை. சங்கமே ததிங்கினத்தோம் தாளம் போடுது. அது இருக்கட்டும். சமுதாயத்துக்கு உதவணும்னு சொல்ற நீர்

ஒரு பொட்டலத்துக்கு 30 ரூபாய் கேட்டீராமே? இது அநியாயமில்லையோ? என்று கேட்டார் அனந்தராமய்யர்.
“கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே அவர் ரேட் கம்மியா வாங்கறதா புகார் பண்ணினேள். இப்போ என்னடான்னா அதிகமா வாங்கினார்னு சொல்றேள். இது என்ன சமயத்துக்கு ஒரு பேச்சு?” என்றான் பட்டா.
“நீ அவர் ஆளில்லையோ, அப்படித்தான் சொல்லுவே. அது சரி, பொட்டலத்துக்கு முப்பது ரூபாய் வாங்கினாரே, உனக்குச் சம்பளம் ஒருநாளைக்கு எவ்வளவு கொடுத்தார்.” என்று கேட்டார் அனந்தராமய்யர்
“வழக்கமாய்க் கொடுக்கிற 120 ரூபாய் கொடுத்தாரே!” என்றான் பட்டா. பொட்டலத்துக்கு 30 ரூபாய் வாங்கினவர் இன்னும் அதிகமாகக் கொடுத்திருக்கலாமோ என்று அவன் உள்ளத்தில் சலனம் ஏற்பட்டது. அவன் உள்ளத்தில் நச்சு விதைக்கப்பட்டுவிட்டது.
“சங்கத்திலே பணத்தைக் கொடுத்துச் சங்கத்தின் மூலமா என்னாலான கைங்கர்யம் ஏதாவது செய்யலாமேன்னு பார்த்தேன். சங்கத்துக்கு நல்ல பேர் கெடைச்சிருக்கும். பரவாயில்லை. நானே நேரடியா செஞ்சுக்கறேன்” என்று சொல்லிக்கொண்டே எழுந்தார் சாம்பசிவம்.
“நீங்களே மொத்தச் செலவையும் ஏத்துக்கறதுன்னா சங்கத்து மூலமாச் செய்யலாம். “என்றார் தலைவர். அவரது உள்ளம் அந்தப்பணத்தில் எவ்வளவு சுருட்டலாம் என்று கணக்குப் போட்டது.
“வேண்டாம், வேண்டாம். நானே பாத்துக்கறேன்.“ என்று சொல்லிவிட்டுச் சாம்பசிவம் வெளியே வந்தார். அவரைப் பின்தொடர்ந்தான் கோபால். சங்கத்தில் மீண்டும் கசமுசா ஆரம்பமாயிற்று.

அத்தியாயம் 12

# சாம்பசிவத்தின் அறிவுரைகள்

சாம்பசிவம் வீட்டு வாசல் தாழ்வாரத்தில் அவர், அவரது மனைவி, அவரது மகள் ரமா மூவரும் தாயக்கட்டை விளையாடிக்கொண்டிருந்தனர். அப்பொழுது ஒருவர் உள்ளே வந்தார்.

“வாங்கோ, நீங்க யாருன்னு தெரியலையே, ... என்ன வேணும்” என்று கேட்டார் சாம்பசிவம்.

“நான் எஸ் ஐ”

“எஸ் ஐ யா மஃ்டிலே வந்திருக்கேளா?”

“நான் டெலிபோன் எஸ் ஐ.. “என்றார் வந்தவர். “எங்க டிஜிஎம் சீதாராமன் சார் உங்களைப் பார்க்கணுமாம். உங்களைக் கூட்டியாரச் சொன்னாரு. வெளியிலே ஜீப் இருக்கு . வரீங்களா?” என்று கேட்டார்

“நான் இன்னும் ஒரு மணி நேரத்திலே ஒரு விசேஷத்துக்குப் போகணும். வரதுக்கு இரண்டுநாள் ஆகும். வந்ததுக்கு அப்புறம் வந்து பாக்கறேன்னு சொல்லு”

“சார் என்ன சொல்றார்னு போன் பண்ணிக் கேட்டுட்டு வந்து சொல்றேங்க.” என்று சொல்லிக்கொண்டே அவர் வெளியிலே சென்றார்.

சாம்பசிவமும் டெலிபோனுக்கு மனுச்செய்து மூன்று வருடங்களுக்கு மேலாயிற்று. இன்னும் டெலிபோன் வந்த பாடில்லை. வராததும் ஒருவகைக்கு நல்லது என்றே நினைத்தார். போனிருந்தால் அடிக்கடி கூப்பிட்டுத் தொந்தரவு செய்வார்கள். அவர் அளவுக்கு அதிகமா வேலைகளை இழுத்துப் போட்டுக்கொண்டு செய்பவரில்லை. பத்து வீடு தள்ளி ஒரு பொதுத் தொலைபேசி இருந்தது. அவசியப்பட்டா அங்கே போய்ப் பேசுவார்.

சிறிது நேரத்தில் டெலிபோன் சப் இன்ஸ்பெக்டர் திரும்பிவந்தார்.

“டிஜிஎம்முக்கு உங்களை அவசரமாப் பாக்கணுமாம். அவரே கிளம்பி வரதாச் சொன்னாரு. உங்களைக் கொஞ்சம் வெயிட் பண்ணச் சொன்னாரு”

ரமா எழுந்தாள். பரப்பிவைத்திருந்த புத்தகங்களையெல்லாம் பெஞ்சுக்கடியிலே தள்ளினாள். மேலே ஒரு போர்வையைப்

போர்த்தித் தரையைத் தொடும்படிபோட்டு மறைத்தாள். .
சாம்பு சிரித்தார்.
“இங்கே பாரு ரமா, எல்லாத்தையும் அப்பப்போ ஒழுங்கா எடுத்து வச்சிருந்தா இப்படிப் பெஞ்சுக்கடியில் போட்டு மறைக்க வேண்டாமே! பெஞ்சுக்குக் கீழேதான் போட்டியே, அடுக்கியாவது வச்சியோ?. அதோ பாரு ஒரு புஸ்தகம் தலையை நீட்டிக்கொண்டிருக்கு. “என்று மகளைச் செல்லமாகக் கடிந்து கொண்டார்.
“எனக்கு நேரமே இல்லேப்பா. காலையிலே டியூஷன், அப்புறம் ஸ்கூல். அப்புறம் பாட்டு கிளாஸ்.. எனக்கு எங்கே ரெஸ்ட். ஏதோ விச்ராந்தியா உங்க கூடக் கொஞ்ச நேரம் தாயக்கட்டை விளையாடலாமென்றால் அதுக்கும் தடையா யாராவது வரா” என்று அங்கலாய்த்தாள் ரமா.
“இங்கே பாரும்மா. நம்மட்ட நேரம் நிறையவே இருக்கு, அதை உருப்படியா செலவழிச்சா, இன்னும் நானிருக்கேன், நானிருக்கேன்னு நேரம் வந்துண்டே இருக்கும். காலத்தை நாம் வீணாகக் கழிச்சா காலம் நம்மைக் கழிச்சிடும்.”
“உங்களுக்கென்ன, எல்லாத்துக்கும் உபதேசம் பண்ணிடுவேள். எங்களை மாதிரிக் காலேஜிலெ போய்ப் படிச்சாத்தான் எங்க கஷ்டம் தெரியும்.” என்றாள் ரமா.
“ஆமாம்மா. நான் காலேஜிலே போய் படிக்கலைதான். ஆனா நானும் சிக்ஸ்த்பார்ம் வரை படிச்சிருக்கேன். நான் பள்ளிக்கூடத்திலே கத்துண்டதை விட வெளியிலே படிச்சது அதிகம். என்னை வேலைக்குக் கூப்பிடறா பாரு அவாள்ட்டேருந்து கத்துக்கறேன். எங்கிட்டே வேலை செய்யறவாட்டேயிருந்து கத்துக்கறேன். ஏன் உங்கிட்டே இருந்து கூடக் கத்துக்கறேன். அது மட்டுமா, ஈ, எறும்பு, புல், பூண்டு, பாச்சா, காக்கா, கழுதை எல்லாத்துக் கிட்டேருந்தும் கத்துண்டிருக்கேன். காலேஜுக்குப் போய்ப் படிச்சாத்தானா படிப்பு?”
“அப்பா என்னை மன்னிச்சுடுங்கோ. நீங்க என்னைத் தப்பாப் புரிஞ்சுண்டேள்” என்று சொல்லிக்கொண்டே அழத் தொடங்கினாள் ரமா.
“அழாதேமா, அழாதே. எடுத்ததுக்கெல்லாம் அழக்கூடாது. அழறது சில சமயங்களிலே நல்லதா இருக்கலாம். ஆனா அதுவே வீக்னஸ். ஆமாம். உன் பலவீனத்தைக் காட்டிடும்.

தற்காலிகமாக அது ஆறுதல் கொடுக்கலாம். பல சமயங்களில் அது இளக்காரமாகப் போய்விடும். உன் முன்னாலே ஆறுதலாப் பேசறவா உன் முகத்துக்குப் பின்னாலே "அழுமூஞ்சி" னு பேசுவா. அழலாம். எப்பத் தெரியுமா, ஆண்டவன்கிட்டே அழலாம். "அழுதால் வேண்டிப் பெறலாமே"ன்னு சொல்லியிருக்கா.

"உங்களை விட்டாப்போதுமே. வியாக்கியானம் பண்ண ஆரம்பிச்சிடுவேளே!. அப்பா எனக்கு நீங்கதான் ஆண்டவன். அதனாலே உங்க முன்னாலே அழுதேன்"

"நீ பெரிய ஆளும்மா. உங்கிட்டே பேசிச் ஜெயிக்க முடியுமா?"

ரமா ஓடி வந்து அப்பாவைக் கட்டிக்கொண்டாள்.

"என்ன அப்பாவும் பொண்ணும் கொஞ்சியாகிறது" என்று சொல்லிக்கொண்டே உள்ளிருந்து இரண்டு நாற்காலிகளைக் கொண்டு வந்து துடைத்துப் போட்டாள் மாமி.

"ஒரு சோபா வாங்கிப் போடுங்கோன்னு சொல்லிச் சொல்லி அலுத்துப் போயிட்டேன். கேட்டா நாம் பழசை மறக்கக்கூடாதுன்னு உபதேசம். பழசை மறக்கவேண்டாம். புதுசை வரவேற்கலாமில்லியா?. பெரிய மனுஷா யாராவது ஆத்துக்கு வந்தா உட்காரவைக்க முடிகிறதா"

அலுத்துக்கொண்டாள் மாமி.

"இன்னும் இரண்டு நாளிலே நான் ஒரு சோபா வாங்கிப் போடறேன். அதில் நீ நிம்மதியாப் படுத்துத் தூங்கு. சரியா?"

"ஆமாம். நான் தூங்கறதுக்குத் தான் கேக்கறேன். பொழுது விடிஞ்சா , பொழுது சாயறவரைக்கும் ஒரே வேலை. ஏதோ ஜோலி முடிஞ்சுவந்தா "அக்கடான்னு நீங்க கொஞ்சம் ஆசுவாசப்படுத்திப்பேளேன்னு சொன்னேன். வெளிமனுஷா யாராவது வந்தாலும் உட்காரலாமில்லியோ?" என்றாள் மாமி

"ஏன் பெரிய மனுஷா யாராவது வந்தாத்தன் ஒக்காரணுமோ? இந்தச் சின்ன மனுஷி உட்காரக்கூடாதோ?" என்று சொல்லிச் சிரித்தாள் ரமா.

"போதுமே சிரிப்பு. நீ பெரிய மனுஷியா ஆன நாளிலேயிருந்து வயத்திலே புளியைக் கரைச்சுக்

கொண்டிண்டிருக்கேன். உன் கல்யாணம் நடந்து முடிஞ்சாத்தான் எனக்கு நிம்மதி.''

''என்னம்மா எதையோ சொன்னா எதையோ பேசறே. நான் படிக்கப்போறேன் போ'' என்று சொல்லிக்கொண்டே உள்ளே சென்றாள். ரமா.

டெலிபோன் ஊழியர் கட்டியம் கூறிக்கொண்டே வந்தார். ''எங்க டி ஜி. எம் வராங்க, டிஜி எம் வராங்க!''

சாம்பசிவம் எழுந்திருந்து அவரை வரவேற்றார். நாற்காலியில் உட்காரச் சொன்னார். அவரை எங்கேயே பார்த்திருந்தாற் போலத் தோன்றியது.

''உங்க முகத்தைப் பார்த்தா என் பால்ய சிநேகிதன் இராமநாதன் ஞாபகம் வருது. உங்களுக்கு எந்த ஊரு?'' என்று கேட்டார் சாம்பசிவம்.

''நீங்கள் சொல்வது சரிதான். நான் பாலாமடை இராமநாதய்யர் மகன்தான்'' என்றார் டிஜிஎம்

''ஏ யப்பா, எத்தனை வருஷமாச்சு. உங்க அப்பா எங்கே இருக்கான். இந்தப் பட்டணத்துக்கு வந்ததிலேயிருந்து ஊர்ப்பக்கம் போக முடியலே!''

''எங்க அப்பா இப்போ இல்லே. அவர் போய் அஞ்சு வருஷமாச்சு.''

''அடேடே, அவனும் நானும் பள்ளிக்கூடத்திலே ஒண்ணாப் படிச்சோம். நாங்க ரொம்ப நெருக்கம். ரொம்ப நல்லவன்... ரொம்ப நல்லவன்'' என்று சொல்லிக்கொண்டே பழைய நினைவுகளில் மூழ்கிப்போனார் சாம்பசிவம். சிறிது நேரம் பேசவில்லை.

''மாமா, என் தங்கைக்குக் கல்யாணம். ராம் கல்யாண மண்டபத்திலே வச்சிருக்கோம். அடுத்த மாதம் 17ந்தேதி. நீங்கதான் சமையல் பொறுப்பைக் கவனிச்சுக்கணும்.

''இருங்கோ, டயரியைப் பார்த்துச் சொல்றேன்''. டயரியப் புரட்டிப்பார்த்து

''அடடா 19ந்தேதி இன்னொரு முகூர்த்தம் இருக்கே கட்டுச்சாதம் கொடுத்துட்டு உடனே இன்னொரு முகூர்த்தத்துக்குப் போக வேண்டியிருக்கும். ''

''நீங்கதான் எப்படியாவது நடத்தித் தரணும்''

''என்ன இப்படிச் சொல்றேள். இராமநாதன் பொண்ணுக்குக் கல்யாணம்னா அது எங்காத்துக் கல்யாணமில்லையோ.

நிச்சயமா வரேன். ஆனா அந்தக் கல்யாண மண்டபத்திலே கேஸடுப்புச் சமையலாச்சே. எனக்கு விறகடுப்புத்தான் பழக்கம்.''
''கத்துக்க வேண்டியதுதான். உங்களுக்குச் சொல்லித் தரணுமா?. ஆமாம். உங்காத்திலே டெலிபோன் இருக்கோ?''
''அதையேன் கேக்கறேள். மனுப்போட்டு மூணு வருஷமாயிடுத்து. இன்னும் வந்த பாடில்லே. பக்கத்திலே பி சி வோ இருக்கறதனாலே போய் டெலிபோன் பண்ணிக்கறேன். அவனும் 3 நிமிஷத்திலே கட் பண்ணிடறான். சார்ஜ் வேறே அதிகமாக் கேக்கறான்''
''அப்படிச் செய்யக்கூடாதே. இந்தா பாருப்பா. உன் பேரென்னா... ராமய்யா. அந்தப் பி சி வோ நம்பர் என்னன்னு பார்த்துச் சொல்லு. கட்பண்ணிப்பிடலாம்''
''வேண்டாம் வேண்டாம். இப்போதைக்கு அதுதான் உபயோகமாயிருக்கு.''
''இந்த ஏரியாவிலே மூணுவருஷமாக் காத்திண்டிருக்கற வாளுக்கெல்லாம் கனெக்ஷன் கொடுத்திட்டோமே! உங்களுக்கு ஏன் வல்லேன்னு தெரியலியே! உங்க பர்ட்டிகுலர்ஸ் கொடுங்கோ. உங்களுக்கு டெலிபோன் கிடைக்க ஏற்பாடு பண்ணறேன்''
''ரமா, அந்தப் பிரௌன் ஃபைலைக் கொண்டுவாம்மா. இவதான் என் பொண்ணு. இவளுக்குக் கல்யாணத்துக்கு ஏற்பாடு செஞ்சிண்டிருக்கேன் பி எஸ் .சி படிக்கிறா . இதோ இருக்குப் பாருங்கோ.''
சீதாராமன் குறித்துக்கொண்டார்.
''நான் பார்த்துச் சொல்றேன்'' என்று சொல்லிக்கொண்டே தனது விசிட்டிங் கார்டைக் கொடுத்தார்.
''ரொம்ப சந்தோஷம். இப்போ நான் அவசரமா ஒரு ஜோலிக்குப் போயிண்டிருக்கேன். இரண்டுநாளில் திரும்பி வந்துவிடுவேன். உங்காத்திலே வந்து பார்க்கிறேன். பாரு..''
''இதோ வந்துட்டேன்.'' என்று சொல்லிக்கொண்டே காபி டம்ப்ளருடன் வந்தாள் மாமி.
''இந்தாங்கோ காபி சப்பிடுங்கோ?''
''ராமய்யாவுக்கும் காபி கொடு'' என்றார் சாம்பசிவம்
''நீங்க எங்கே போகணும்னு சொல்லுங்கோ. நான் ட்ராப் பண்றேன்'' என்றார் டி.ஜி.எம் சீதாராமன்

“என் கூட வேலை செய்யறவா இப்போ வருவா. அவா கூட நான் போய்க்கிறேன்” என்றார் சாம்பு. சீதாராமன் விடைபெற்றுச் சென்றார். சாம்பு உள்ளே சென்று சட்டையை மாட்டிக் கொண்டார்.

“அப்பா, அப்பா, நம்மாத்துக்குப் போன் வரப்போகுதாப்பா?” என்று கேட்டாள் ரமா.

“ஆமாம். அதுதான் கவலையா இருக்கு.”

“ஏம்ப்பா?”

“நீ எப்போவும் போனும் கையுமா இருப்பியே!”

“போங்கப்பா” சாம்பசிவம் சிரித்தார்.

அத்தியாயம் 13

# உடையார்முன் இல்லார்போல்

“டே கிட்டா, நீ கேஸ் அடுப்பிலே சமையல் பண்ணியிருக்கியோ?”
“எங்காத்துலே கேஸ் ஸ்டவ்லேதான் சமையல் பண்றோம். ஆனால் ஒரு கல்யாணத்துக்குப் பண்ற அளவுக்கு கேஸ் அடுப்பிலே எப்படி சமைக்கிறதின்னு எனக்குத் தெரியாது”

“ஏண்டா, எங்களுக்குத்தான் வயசாயிண்டிருக்கு. உங்களைப் போல இருக்கிறவா இதைத் தெரிஞ்சு வச்சிருக்க வேண்டாமா?”

“உங்களை விட்டு நான் வேறே எங்கேயாவது சமையலுக்குப் போயிருக்கேனா? உங்களுக்குத் தெரிஞ்சது தான் எனக்கும் தெரியும்.””

“டே, டெலிபோன் அதிகாரி சீதாராமன் வீட்டுக் கல்யாணத்திலே கேஸ் அடுப்பிலே சமையல் செய்யணும். அந்த வேலையை வேறு யாரிட்டேயும் நான் கொடுக்க முடியாது. நீ போய் எங்கேயாவது கத்துண்டு வாயேன்”
“நீங்க சொல்லிக் கொடுத்துக் கத்துக்கறவன் நான். எங்கேபோய்க் கத்துக்க முடியும்”
“கிட்டா நாம் புதுசா வர்றதெல்லாம் கத்துக்கலைன்னு வச்சுக்கோ நாம காலங்கடந்தவாளா ஆகிடுவோம்.”
“இப்பல்லாம் மொத்தக் காண்ட்ராக்ட் கொடுத்துடறா. வாத்தியாரிலிருந்து, சமையல்காரா, கோலம்போடுற மாமி வரை எல்லாம் காண்ட்ராக்ட் தான். கல்யாணம் பண்றவா பணத்தைக் கொடுக்கிறா. கல்யாணத்தன்னைக்கு முதல்நாள் வரா. கல்யாணத்தை நடத்திட்டுப் போயிண்டே இருக்கா. காண்ட்ராக்ட்காரன் எல்லாத்தையும் பாத்துக்கறான். இன்னும் கொஞ்சநாள் போனா நாம் கூட இந்தக் காண்ட்ராக்ட்காராளிடம் சப்காண்ட்ராக்ட் எடுக்க வேண்டி வரும்”

“அந்த நிலைமை நமக்கு வரக்கூடாது. அப்படி வர்றதுக்கு முன்னாலே நாம் கத்துக்கணும். ஆனா இந்த கேஸ் சிலிண்டர் ஆபத்தாமே! வெடிக்குதாமே!”

“என்ன மாமா, நீங்க கொழந்தை மாதிரிச் சொல்றீங்களே!. நானும் அப்படித்தான். எங்க ஆத்துக்காரிக்கு கேஸ் சிலிண்டர் வாங்கித்தரமாட்டேன் ஆபத்தானதுன்னு சொன்னேன். கேஸ் சிலிண்டர் வாங்கிப் பயன்படுத்தனதுக் கப்புறம் இப்போ முன்னாலே பயன்படுத்திண்டிருந்த ஸ்டவ் தான் அதிக ஆபத்துன்னு தோணுது”

”என்னாலே கத்துக்க முடியுமாடா?”

“என்ன மாமா, பரீட்சைக்குப் போற படிக்காத மாணவன் மாதிரிப் பேசறீங்களா. உங்களுக்குக் கற்பூரப் புத்தி மாமா. உடனே பிடிசுக்குவேள்.. மாமா இன்னொரு விஷயம் உங்களுக்குத் தெரியுமோ? நம்ம பட்டா இன்னைக்கு வேறொரு ஜோலிக்குப் போயிருக்கான்.”

“என்னடா சொல்றே, தனியாகவா போயிருக்கான்”

“இல்லை, இன்னிக்கு ராம் கல்யாண மண்டபத்திலே வெங்கட்ராமய்யருடைய சமையல். அவர் கூப்பிட்டாராம். இவன் போயிட்டான்.”

“அப்படிப் போக மாட்டானே! எங்கிட்டே சொல்லாம அவன் எங்கேயும் போனதில்லையே!”

“மாமா, உங்களுக்கு வெளுத்ததெல்லாம் பாலு. அவன் மனசை யாரோ கலைச்சிருக்கா. அவனுக்கு உங்க மேலே கோபம். அந்தப் பொட்டலக் காண்ட்ராக்ட் வேலையிலே நீங்க நெறைய வாங்கிண்டு அவனுக்குச் சம்பளம் குறைவாக் கொடுத்தேளாம்”

“உனக்கு எப்படித் தெரியும்”

“அவன் எங்களையும் கலைக்கப் பார்த்தான்.”

“பின்னே நீங்க ஏன் போகலே. உங்களை வேறு யாராவது கூப்பிட்டா போயிடுவேளா?”

“மாமா எங்களுக்கு உங்களைப் பத்தித் தெரியாதா? ”

“உங்களையெல்லாம் என் குடும்பத்துக்காராளாத்தான் பாக்குறேன். அவனைப் பரிசாரகர் சங்கத் தலைவர் தான் இல்லாததெல்லாம் சொல்லிக் கலைச்சிருக்கணும். அப்படிச் சந்தேகம் வந்தா என்கிட்டே வந்து கேட்டிருக்கலாமே?. உண்மையிலே அந்த வேலையிலே எனக்கு 2000 ருபாய்

நஷ்டம்டா. எவ்வளவு வாங்கினேன்னு வெளியிலே சொல்ல மாட்டேன்னு அவாளுக்கு வாக்குக் கொடுத்திருக்கேன். அதனாலேதான் உங்கிட்டக் கூடச் சொல்லலே. இனிமேலும் சொல்ல மாட்டேன்.''

“மாமிட்டேச் சொன்னேளில்லையா?

“ஆமாம், சொன்னேன் அரசியல் வாதிகள் எனக்கு இடைஞ்சல் பண்ணினா உண்மை என்ன ன்னு மாமிக்குத் தெரிஞ்சிருக்கணுமோ இல்லியோ? அதுனாலேதான் சொன்னேன். அது மாத்திரமில்லே. பொண்டாட்டி புருஷனுக்கிடையிலே இரகசியம் இருக்கக் கூடாது''

“பட்டாவை என்ன பண்ணலாம் மாமா?''

“அடே, பட்டாவை அவாள்ளாம் தூக்கி எறிஞ்சுடுவாடா? பட்டா நல்லவண்டா. இப்படிக் கெட்டுப்போயிட்டானே. நான் இன்னிக்குச் சொல்றேன் கேட்டுக்கோ. வாலைக் குழைச்சுண்டு நம்மட்டே திரும்பி வருவான் பாரு''

“நீங்களும் திரும்ப எடுத்துப்பேள்''

“ஏன், உன்னை ஏத்துக்கலையா?''

கிட்டாவால் எதுவும் பதில் சொல்ல இயலவில்லை.

“மாமா, நமக்கு அந்த ராம் கல்யாண மண்டபத்திலே தானே அடுத்த மாதம் ஜோலி. வெங்கட்ராமய்யார் உங்ககிட்டே வேலை பார்த்தவர் தானே! இன்னிக்கும் உங்கமேலே அவருக்கு அசாத்திய மதிப்பு. நாம இன்னிக்கு அங்கே போய் சமையல் ஏற்பாட்டைத் தெரிஞ்சுண்டா என்ன?'' என்று கேட்டான் கிட்டா. அந்தச் சமயத்தில் கோபாலும் அங்கே வந்து சேர்ந்தான்.

“கிட்டா நீ சொல்றதும் சரிதான். கோபால், நாங்க ராம் கல்யாண மண்டபத்துக்குக் கேஸ் அடுப்புச் சமையலைப் பார்க்கப் போறோம். நீயும் அதைத் தெரிஞ்சுக்கிறது நல்லது. உனக்கு வேறு வேலையிருக்கா?''

“நானும் வரேன். போகலாம்'' என்றான் கோபால்.

மூவரும் புறப்பட்டுச் சென்றார்கள். கல்யாண மண்டபத்திலே சாம்பசிவம் நுழைவதைப் பார்த்ததும் மாப்பிள்ளையின் தந்தை ஓடோடி வந்தார்.

“வாங்கோ, வாங்கோ, என்னைத் தெரியறதா? எண் பொண்ணு கல்யாணத்திலே நீங்கள்தான் சமையல். இன்னிக்கும் எங்க சம்பந்தி அதைப்பத்திப் பேசறார். . நீங்க

வந்தது ரொம்ப சந்தோஷம். இங்கே உங்க சமையலா?" என்று கேட்டார்.
"இல்லை, இல்லை என்னுடைய சிஷ்யனின் சமையல்தான். அவரை ஒரு ஜோலியாப் பார்த்துட்டுப் போகலாமின்னு வந்தேன்"
"நீங்க இருந்து பொண்ணையும் மாப்பிள்ளையையும் ஆசீர்வாதம் பண்ணனும்." சாப்பிட்டுட்டுத்தான் போகணும். நான் வரட்டுமா?" என்று சொல்லிக்கொண்டே சென்றார்.
சாம்பசிவமும் மற்ற இருவரும் சமையல் கூடத்துக்குள் சென்றார்கள்.
நல்ல விசாலமாக இருந்தது. அவரைப் பார்த்த வெங்கட்ராமய்யருக்கு ஆச்சர்யம். பட்டாவை வேலைக்கு எடுத்துக்கொண்டதால் ஒருவேளை சண்டை போட வந்திருக்கிறாரோ என்று சந்தேகப்பட்டார்.
"வாங்கோ, வாங்கோ" என்று சொல்லிக்கொண்டே அவருடைய காலைத் தொட்டு வணங்கினார்.
"நன்னாயிரு, நன்னாயிரு" என வாழ்த்தினார் சாம்பசிவம்.
"பட்டா எங்கிட்டே வேலைக்கு வரணும்னு ஆசைப்பட்டான். உங்ககிட்டச் சொல்லிட்டதாகச் சொன்னான். அதனாலேதான் அவனைச் சேர்த்துண்டேன்."
"அதனாலே என்ன. அவன் நன்னா வேலை செய்வான். நாளானா சிறகு முளைக்க வேண்டியதுதானே! நான் இப்போ வந்தது ஒங்கிட்டே சில விஷயங்களைக் கத்துக்கலாமேன்னுதான்"
"அபச்சாரம், அபச்சாரம். எங்கிட்டேயா? பெரியவா அப்படிச் சொல்லப்படாது."
"எனக்கு இந்தச் சத்திரத்திலே அடுத்த மாசம் ஒரு ஜோலி. எனக்குக் கேஸ் அடுப்பிலே சமையல் பண்ணத் தெரியாது. பழக்கமில்லை. அதனாலே தான் அதை ஒங்கிட்டேக் கத்துக்கலாம்னு வந்திருக்கேன்"
"பேஷா!. அது என் பாக்கியம். வாங்கோ காமிச்சுக் கொடுக்கிறேன். டே , சீமாச்சு, இவாளுக்குக் காபி கொண்டுவா?"
"எனக்கு ஒரு டம்ளர் மோர் போதும். இவாளுக்குக் காபி கொடுக்கச் சொல்லு."

''டே, மணிகண்டா , மாமாவுக்குத் திக்கா ஒரு கப் மோர் கரைச்சு எடுத்துண்டு வா?'' என்று உத்தரவு போட்டார் வெங்கட்ராமய்யர்.
தொலைவிலிருந்து பட்டா இவரைப் பார்த்துவிட்டான். ச\ற்றுத் தயங்கிவிட்டு அவரை நோக்கி வந்தான்
“மாமா, என்னை.''
“போடா, போ. எனக்கு எல்லாம் தெரியும். வேலைக்கு வந்த இடத்திலே ஒழுங்கா வேலையைப் பாரு. அதைத் தவிர வேறு விசனப்படக்கூடாது. என் பேரைக் காப்பாத்து'' என்று அவனுக்கு அறிவுரை கூறிவிட்டு வெங்கட்ராமய்யருடன் சென்றார்.

கேஸ் அடுப்பு ஏற்பாட்டையெல்லாம் அவர் விளக்க விளக்க ஒரு பள்ளிக்கூட மாணவனைப் போலக் கேட்டுக்கொண்டு வந்தார். மிக ஆர்வத்தோடு கற்றுக்கொண்டார்.
“கோபால் நீயும் நன்னாப் பாத்துக்கோ. எனக்குச் சந்தேகம் வந்தா நீ தான் சொல்லணும். கிட்டா நீயும் தெரிஞ்சுக் கோடா'' என்றார்.
“மாமா, நீங்க கல்யாண வீட்டிலே சாப்பிட மாட்டேள். நீங்க சாபிட்டுட்டுப் போனா சந்தோஷப் படுவேன்'' என்றார் வெங்கட்ராமய்யர்.
“நான் சமையல் செய்யற கல்யாண வீட்டிலேதான் நான் சாப்பிட மாட்டேன். பிடிக்காது. அவ்வளவுதான். இங்கே , இது உன் சமையலாச்சே. என் சிஷ்யன் எப்படிச் சமையல் பண்றான்னு நான் தெரிஞ்சுக்க வேண்டாமா? அது மாத்திரம் இல்லை. கேஸ் அடுப்பைப் பத்தி சொல்லிக் கொடுத்துக் குருவாயிட்டே. குரு சொல்றதைத் தட்டக் கூடாதில்லையா?. இருந்து சாப்பிட்டுட்டே போறேன்'' என்றார்.
அப்பொழுது ஒரு பையன் அவருக்குக் குடிக்க மோர் கொண்டு வந்தான்
“ஏண்டா இதைக் கொண்டுவர இவ்வளவு நேரமா?'' என்று கத்தினார் வெங்கட்ராமய்யர்.
சாம்பசிவம் அந்தப்பையனைக் கூர்ந்து பார்த்தார். அவனை எங்கோ பார்த்திருப்பது போல் இருந்தது
“அம்பி நீ அய்யாவாள் பேரன் தானே?'' என்று கேட்டார்.
“ஆமாம்'' என்றான் பையன்.

“அப்பா என்ன செய்யறார்?”
“அப்பா செத்துப்போய் இரண்டு வருஷம் ஆச்சு. கவிஞர் சாம்பவின்னு கேள்விப்பட்டிருக்கீங்களா. அவங்கதான் என் அம்மா” என்றான்”
“வெங்கட்ராமா, இவன் யார் தெரியுதா, எனக்குச் சமையல் சொல்லிக் கொடுத்த அய்யாவாளின் பேரன். அய்யாவாள் கடைசி காலத்திலே வலிப்பு வந்து கஷ்டப்பட்டார். அவருக்கு ஒரே பையன். அவரது மகன்தான் இவன். எப்படி இருந்த குடும்பம்.! இப்போ படிப்பை விட்டுட்டு இந்த வேலைக்கு வர ஆரம்பிச்சுட்டான்.. கோபால் இவாத்து அட்ரஸ் வாங்கிக்கோ. அம்பி, நீ என்ன படிச்சிருக்கே?” என்று கேட்டார்.

“நான் பத்தாவது வரை படிச்சிருக்கேன் மாமா” என்றான் அம்பி.
“உங்க அம்மாட்டே சாம்பசிவய்யர் வந்து பார்க்கறேன்னு சொன்னார்னு சொல்லு” என்றார் சாம்பசிவம். கோபால் அவனது முகவரியைக் குறித்துக்கொண்டான்.
அன்று அங்குச் சமையல் நன்றாகவே இருந்தது..

அத்தியாயம் 14

# முதல் காதல்

சாம்புவின் மனம் அமைதியில்லாமல் தவிக்கும் போது அவர் வீட்டில் இருக்க மாட்டார். வீட்டுக்கு வெளியே இரண்டு தெருத்தள்ளி ஒரு பூங்கா இருந்தது. அதை ஒட்டி ஒரு சிறு குளம் இருந்தது. அங்குச் சென்றுவிடுவார்.
குளத்தங்கரையில் அமர்ந்து காற்றில் அந்தக் குளத்தில் தண்ணீரில் மெதுவாகச் சலனம் எழுவதைப் பார்த்துக் கொண்டிருப்பார். சிலசமயங்களில் ஒரு ஓட்டாஞ்சில்லியை எடுத்துத் தண்ணீரில் வீசுவார். அது தாவித்தாவிச் செல்லும். அங்கே சுழலாக வட்டமடிக்கும். அதைக்கண்டு மகிழ்வார். மனம் ஓரளவு சாந்த மடையும். சாம்பு அந்தக் குளத்தின் கரையில் அமர்ந்திருந்தார். அவரது மனம் பின்னோக்கிப் போனது.

சாம்புவுக்கு அப்பொழுது 25 வயதிருக்கும். அய்யாவாள் வீட்டிலேதான் பெரும்பாலும் இருப்பான். அவருடன் சமையல் வேலைக்குச் செல்வான். அவர் அவனுக்குச் சமையல் நுணுக்கங்கள் எல்லாம் கற்றுக் கொடுத்தார். தென் மாவட்டங்களிலே அய்யாவாள் சமையல் பிரசித்தம். சமையல் வேலையில்லாமல் வீட்டிலிருக்கும் போது கனிவாக இருப்பார். அவர் சமையல் நடக்கும் போது மிகவும் கண்டிப்பாக இருப்பார்.

அவரிடம் வேலை செய்வதே ஒரு தனி அனுபவம் தான். அவருடைய திட்டுகள் எவரையும் புண்படுத்தியதில்லை. “மண்டு, போக்கிரி” என்று தாய் மகனைத் திட்டுவது போலத்தான். ஆனால் அவ்வார்த்தைகளே மற்றவர்களை இயக்கின.

அவர் வீட்டிற்கு ஒரு நாள் அவருடைய தம்பி மகள் மீனாக்ஷி வந்திருந்தாள் 20 வயதிருக்கும். பொது நிறமாகவிருந்தாலும் அழகாக இருந்தாள். அய்யாவாளுக்கு ஒரே ஒரு மகன்தான். அவன் பெயர் கல்யாண ராமன்.

அவனுக்கும் ஏறத்தாழச் சாம்புவின் வயதுதான். கல்லூரியில் படித்துவிட்டு வேலையிலிருந்தான்.
அன்று அவனால் மறக்க முடியாத ஒருநாள். வெளியிலே தன்னந் தனியாக மீனாக்ஷி பாண்டியாடிக் கொண்டிருந்தாள். உள்ளிருந்து அய்யாவாளின் மனைவியின் அழைப்பு வரவே துள்ளிக் குதித்துக் கொண்டு வந்தாள். படிதடுக்கிக் கீழே விழப்போனாள். அருகில் நின்றிருந்த சாம்பசிவம் அவள் கீழே விழாமல் தாங்கிப் பிடித்துக்கொண்டான். அந்தச் செயலில் அவன் தோள்மேல் சாய்ந்தாள். அவனது கை அவளது மார்பகத்தில் அவனை அறியாமல் பட்டு விட்டது. அவள் விடுபட்டுக் கொண்டு உள்ளே ஓடினாள். நல்ல வேளையாக எவரும் பார்க்கவில்லை.

அதுவரை ஒரு இளம்பெண்ணின் ஸ்பரிசத்தை அறியாதிருந்த சாம்பு முதன்முதல் அறிந்தான். ஏதோ ஒரு இன்பக் கிளுகிளுப்பு. ஆனாலும் உள்ளுக்குள் பயம். அவள் மாமியிடம் சொல்லிவிடுவாளோ, தன்னைத் தவறாகக் கருதிவிடுவாளோ என்று பயந்தான்.

ஆனால் சிறிது நேரத்தில் வெளியில் வந்த மீனாக்ஷி அவனைப் பார்த்துப் புன்னகைத்துக் கொண்டே சென்றாள். அவன் இதயம் துடித்தது. உடம்பில் புதுமையான உணர்வு. அய்யாவாள் வீட்டிற்கு இன்னும் கொஞ்சம் அதிகமாகச் செல்ல ஆரம்பித்தான். வேலையில்லா நாட்களில் அங்கேதான் சாப்பிடுவான். மாமிக்குச் சமையலில் உதவுவான். அப்பொழுது மீனாக்ஷியும் அடுக்களைக்குள் வந்துவிடுவாள். ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளாமலும் தொட்டுக் கொள்ளாமலும் அவர்களின் காதல் வளர்ந்தது.

அய்யாவாளின் குடும்பம் வசதியான குடும்பம், அவருடைய தங்கை கிராமத்திலே ஒரு பண்ணையாருக்கு வாழ்க்கைப் பட்டிருந்தாள். வசதியான குடும்பம். அவர்கள் வீட்டுப் பெண்ணைத் தான் காதலிப்பதா? நடக்குமா என்று சாம்பசிவம் எண்ணியதுண்டு. காதலுக்கு இதெல்லாமா தெரியும்! பல சமயங்களில் மனத்திலிருந்து அந்த எண்ணத்தையே தூக்கி எறிந்துவிட வேண்டும் என்று

முனைவான். அதற்காகவே மனத்தை மாற்றத் தியானத்தில் உட்காருவான்.
அவள் பெயர் மீனாக்ஷி என்றிருந்தாலும் அவளை எல்லாரும் கண்ணம்மா என்றே அழைத்தார்கள். அது செல்லப்பெயர்.

ஒருநாள் அவன் வானொலியில் "சுட்டும் விழிச்சுடர்தான் கண்ணம்மா" பாடலைக் கேட்டான். அவனுக்கு அது மிகவும் பிடித்திருந்தது.

உடனே கடைக்குப்போய் பாரதியார் கவிதைகள் புத்தகம் வாங்கிக்கொண்டு வந்து படித்தான். கண்ணன் பாட்டு முழுதும் அவனுக்கு மனப்பாடம் ஆயிற்று. அதன் தொடர்ச்சியாக பாரதியின் மற்றப் பாடல்களையும் படிக்கத் தொடங்கினான்.
ஒருநாள் "காற்று வெளியிடைக் கண்ணம்மா" என்ற பாடலை மிகவும் இரசித்துப் பாடிக்கொண்டிருந்தான். அப்பொழுது அய்யாவாளின் மகன் கல்யாணராமன் அங்குவந்தான். அவனுக்கும் அந்தப்பாடல் பிடித்திருந்தது "சாம்பு எனக்கும் இந்தப் பாட்டுப் பாடக் கற்றுக் கொடு" என்றான் கல்யாண ராமன்.
"உனக்கு இந்தப் பாட்டுப் பிடிக்குமா?"
"பிடிக்குமாவாவது. உயிர். எனக்குத்தானே கண்ணம் மாவைக் கல்யாணம் செஞ்சு வைக்கப்போறா. அவளை எனக்கு ரொம்பப் பிடிக்கும்" என்றான் கல்யாணராமன்.
கண்ணம்மாவும் தூணின் மறைவிலிருந்து இதைக் கேட்டுக்கொண்டிருந்தாள். அவள் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. அவளுக்குக் கல்யாண ராமனை அவ்வளாகப் பிடிக்கவில்லை.
சாம்புவின் உடம்பு வாட்டசாட்டமான உடம்பு. உடலுழைப்புச் செய்து வேலை செய்ததால் உடம்பு திடமாக இருந்தது. நல்ல பண்பாளன். கல்யாண ராமனுக்குப் படித்தவன் என்ற கர்வம் உண்டு. அப்பாவிடம் வேலை செய்பவர்களைத் தன்னிடம் வேலை செய்பவர்கள் போல் நடத்தினான். கண்ணம்மா பாட்டைச் சாம்பு பாடக் கேட்டதிலிருந்து அவனைப் பிடித்துப்போயிற்று.

சாம்புவைப் பார்க்கும் போதெல்லாம் கண்ணம்மா
புன்னகைப்பது வழக்கமாகப் போய்விட்டது.
சாம்பு அங்கு சாப்பிடும் போதெல்லாம் அவளே வலிய
வந்து பரிமாறினாள்.
ஒரு நாள் அய்யாவாள் சாம்புவை அழைத்தார்.
“சாம்பு, கல்யான ராமன் வெளியூருக்குப் போயிருக்கான்.
இன்னைக்கு 2 மணி ரெயிலுக்குக் கண்ணம்மா ஊருக்குப்
போகணும். நீ அவளை ஒரு குதிரை வண்டியில்
ஏற்றிக்கொண்டு போய் இரயிலேத்திட்டு வந்து சேர்” என்றார்

சாம்பு இரயிலேத்த வரான் என அறிந்த கண்ணம்மாளுக்கு
ஒரே சந்தோஷம். குதிரை வண்டியில் அவளருகில்
உட்காருவதற்குச் சங்கோசப் பட்டுக் கொண்டு ஒரு ஓரமாக
உட்கார்ந்தான்.
“தாராளமாக உக்காத்துக் கோங்கோ” என்றாள்
கண்ணம்மாள்.
அவளின் குரல் அவனுக்கு இனித்தது.
அவன் அவள் அருகில் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்து
கொண்டான். அவனுடைய கையை எடுத்துத் தன் கையோடு
கோத்துக் கொண்டாள். அவனுக்குப் புல்லரித்தது. கையை
விடுவித்துக் கொள்ள முயன்றாலும் விடுவித்துக் கொள்ள
விரும்பவில்லை. ஒருவரை ஒருவர் பார்த்துக்
கொண்டார்கள். பார்வையாலேயே பேசினார்கள்.
இரயில்வே ஸ்டேஷனை நெருங்கிவிட்டார்கள்
“இன்னும் கொஞ்சம் நேரம் கழித்து ஸ்டேஷன
வரக்கூடாதா?” என்றாள் கண்ணம்மா.
“இன்னும் அரைமணி நேரத்தில் டிரெய்ன் வந்து விடுமே?”
என்றான் சாம்பு. குதிரை வண்டியிலிருந்து இறங்கி
ஸ்டேஷனுக்குள் சென்றார்கள். சாம்புதான் அவளுடைய
சாமான் பையைத் தூக்கிக் கொண்டான். இரயில்
அன்றைக்கு அரைமணி நேரம் தாமதமாக வரும்
என்றார்கள்.
ஸ்டேஷனில் இருந்த ஒரு பெஞ்சில் அமர்ந்தார்கள்.
ஸ்டேஷனில் கூட்டம் அதிகமில்லை.
”எனக்காகக் “காற்று வெளியிடைக் கண்ணம்மா” பாட்டை
என் காதில் மட்டும் கேட்கிற மாதிரிப் பாடுங்களேன்”

என்றாள் கண்ணம்மாள். சாம்பு மெதுவாகப் பாடினான். அவள் அவன் கையை எடுத்து அவள் கையில் வைத்துக் கொண்டாள்.

“சுட்டும் விழிச்சுடர்தான் கண்ணம்மா” பாட்டையும் பாடுங்களேன்” என்றாள். அதையும் மெதுவாகப் பாடினான்.

“மூத்தவர் சம்மதியில் வதுவை முறைகள் பின்பு செய்வோம்” என்று தொடங்கிய போது நிறுத்திக்கொண்டான்

“அதையும் தொடர்ந்து பாடுங்கள்” என்றாள். பாடத் தயங்கினான்

“நமக்குக் கல்யாணம் நடக்காது என்பது எனக்குத் தெரியும். கன்னத்து முத்தமும் இங்கே கொடுக்க முடியாது என்பதும் தெரியும். பாடிக்கூடவா சந்தோசப் பட்டுக்கொள்ளக் கூடாது. பாடும் போதே கற்பனையா எனக்குக் கொடுத்திடுங்கோ. நானும் வாங்கிக்கறேன்” என்றாள்.

எவ்வளவு தெளிவாகவும் யதார்த்தமாகவும் பேசினாள். அவளுடைய பெற்றோர் அந்தஸ்து கருதியும், உறவு விட்டுப்போகக் கூடாதென்றும் கல்யாணராமனுக்குத்தான் கட்டிவைப்பார்கள் என்று அவளுக்கு நன்கு தெரியும். அவளால் எதிர்த்து ஒன்றும் சொல்ல முடியாது. கல்யாணராமனோடு ’கொஞ்சக்’ காதல். சாம்புவோடு நெஞ்சக் காதல். அவள் ஆசையோடு கேட்டதனால் பாடினான்

“மூத்தவர் சம்மதியில் வதுவை
முறைகள் பின்பு செய்வோம்
காத்திருப்பேனோடி இதுபார்
கன்னத்து முத்தமொன்று

கடைசி இரண்டு அடிகளைப் பாடிய போது கற்பனையில் முத்தம் கொடுத்துக் கொண்டார்கள். . அவர்கள் கைவிரல்கள் கொஞ்சம் இறுகி அந்தக் காரியத்தைச் செய்தன.

பிறகு கையை விடுவித்துக் கொண்டு கன்னத்தைத் தடவிக் கொண்டாள். அதன் பொருளை அறிந்து சாம்பு புன்னகைத்தான். இரயில் வந்தது. கண்ணம்மா வண்டியில் ஏறிக்கொண்டாள்.

“முதன்முதலாக” என்று சொல்லிவிட்டுச் சற்று இடைவெளி கொடுத்து “போயிட்டு வாரேன். மறக்க மாட்டேன்” என்றாள்.

சாம்பசிவம் அந்த ஸ்டேஷனின் மரப்பெஞ்சில் அமர்ந்து கற்பனையில் மூழ்கினான்.

6 மாதங்களுக்குப் பின் அவளுக்கும் கல்யாண ராமனுக்கும் கல்யாணம் நடந்தது. அன்று முழுதும் சமையல் கட்டிலேயே இருந்தான் சாம்பு. கல்யாணப் பந்தலுக்கு அவன் வரவே இல்லை. சாம்புவுக்கும் பெண்பார்த்து அய்யாவாளே கல்யாணம் செய்துவைத்தார். அவன் கல்யாணத்தில் கண்ணம்மா பல வேலைகளைத் தானே இழுத்துப் போட்டுக்கொண்டு செய்தாள்.

பிறகு அய்யாவாளிடம் உத்தரவு பெற்றுத் தனியாகச் சமையலைச் செய்யத் தொடங்கினான். அதற்குப் பிறகு ஒவ்வொரு தீபாவளிக்கும் அய்யாவாளைப் பார்த்து புது வஸ்திரங்கள் வாங்கிக் கொடுத்துவிட்டு வருவான். அதில் அவருக்கு, மாமிக்கு, கல்யாண ராமனுக்குக் கண்ணம்மாளுக்கு வஸ்த்ரங்கள் இருக்கும். நமஸ்காரம் செய்துவிட்டு வந்துவிடுவான். கண்ணம்மாளுக்குக் கல்யாணம் ஆகிப் பல ஆண்டுகள் கழித்துத்தான் குழந்தை பிறந்தது.

சாம்பசிவம் நினைவுகளிலிருந்து மீண்டார். கண்ணம்மா சாம்பவின்னு புனைபெயர் வச்சுண்டிருக்காளாமே! தன் நினைவாகத்தான் அந்தப் பெயரை வைத்திருக்கவேண்டும் என்று நினைத்தார். இன்னும் தன்னை அவள் மறக்கவில்லை என்பது தெரிந்தது. அந்தப் பையனுக்கு ஏதாவது ஒரு வேலை வாங்கிக் கொடுக்கவேண்டும். கவிஞர் சாம்பவியின் கவிதைகளை எப்பவோ ஒன்றிரண்டு படித்தது நினைவுக்கு வந்தது. கல்யாணராமன் ஏதாவது சொத்து வைத்து விட்டுப் போயிருக்கானா என்று தெரியவில்லை. எழுதி அவள் அதிகம் சம்பாதிக்க முடியாது. அதனால்தான் அவளது பையன் சமையல் வேலைக்கு வரான் போலத் தெரிகிறது. இன்னும் ஓரிரண்டு தினங்களில் அவளைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது..

அத்தியாயம் 15

# உள்ளத்துக்குள் ஒரு வாழ்க்கை

“வாங்கோ, வாங்கோ, நீங்க வந்து என்னைப் பார்க்கிறேன்னு சொல்லியனுப்பிச்சது எனக்குச் சந்தோஷமா இருந்தது,” என்றாள் மீனாக்ஷி என்ற கண்ணம்மா.

“கல்யாணராமன் காலமானது எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் அப்பொழுதே வந்து பார்த்திருப்பேன்” என்றார் சாம்பு.

“முதலில் உக்காருங்கோ. உங்ககிட்டப் பேசவேண்டியது நிறைய இருக்கு.”

“உங்க பையன் எங்கே? வெளியே போயிருக்கானா?”

“ஆமாம் சமையல் வேலைக்குப் போயிருக்கான்.”

“சமையல் வேலைக்குப் போகிற அளவுக்கு அவ்வளவு சங்கடமா.? அய்யாவாள் , கல்யாண ராமன் எதுவும் வச்சுட்டுப் போகலியா?”

“நெறயவே வச்சுட்டுப் போயிருக்கா. எனக்கும் என் பையனுக்கும் போதும். அவா வாழ்ந்த ஆத்துலேதான் நானும் வாழ்ந்துண்டிருக்கேன். ஆமாம் . நான் தெரியாமத்தான் கேக்கறேன். சங்கடம் இருந்தால்தான் சமையல் வேலைக்குப் போகணுமா?”

“அப்படியில்லே. அந்த வேலைமட்டும் தெரிஞ்சவா வசதியிருந்தாலும் அந்த வேலைக்குப் போவா. வசதியில்லாதவா வாழ்வதற்காக அந்த வேலைக்குப் போவா”

“என் பையன் மூணாவது ரகம். தாத்தா தொழில் விட்டுப்போயிடக் கூடாதென்பதற்காகக் கத்துக்கறதுக்காக அதுக்குப் போறான்.”

“பத்தாவது வரைக்கும் படிச்சிருக்கானே, வேறு வேலைக்குப் போகலாமே”

“போகலாந்தான். போவான். முதலிலே இதைத் தெரிஞ்சுக்கட்டும்.”

“கல்யாண ராமன் உடம்பு சௌரியமில்லாமே இருந்தானா?

“அதெல்லாம் ஒன்று மில்லே. குடி. சதா குடி. கேட்டா அடி. அவா அப்பாவும் நொந்து போனார். அதுவே அவரைச் சீக்குலே தள்ளிடுத்து. பக்கவாதம். அவரைப்போல ஒரு அன்பான மனுஷனைப் பார்க்க முடியாது. மாமியாரும் போய்ச் சேர்ந்துட்டா. இரண்டு பேருக்கும், ஏன், மூன்று பேருக்கும் பணிவிடை செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைச்சது.. இப்போத் தனியாளா இருக்கிறேன்”

“உங்க அப்பா பெரிய பண்ணையாராச்சே, அங்கே போகலியா?”

“அவா. கூப்பிட்டா. வரமாட்டேன்னு சொல்லிட்டேன். இங்கே நினைவுகளோடு நிம்மதியா இருக்கேன். கிராமத்திலேருந்து அரிசி பருப்பு எல்லாம் வருது. “

சாம்பசிவம் நிமிர்ந்து பார்த்தார். அவள் முகத்தில் குங்குமம் தெரிந்தது.

“விதவையான பிறகும் குங்குமம் வெச்சிருக்கேனேன்னு பார்க்கறேளா? நான் ரெண்டு வாழ்க்கை வாழ்ந்துண்டிருக்கேன். இந்த உடம்பு அதுக்கு உரிமையானவரை இழந்துடுத்து. ஆனால் இந்த உள்ளம் இருக்கே. அது இன்னும் மங்களமாத்தான் வாழ்ந்திண்டிருக்கு. அன்னைக்கு இரயில்வே ஸ்டேஷனில் சொன்னேனே , ஞாபகம் இருக்கா ”மறக்க மாட்டேன்”னு சொன்னேன். மறக்கலே. உங்களோடு உள்ளத்திலே வாழ்ந்திண்டிருக்கேன். அதுக்கு உடல் சம்பந்தம் கிடையாது.”

“நீங்க பெரிய கவிஞராமே, அதுனாலேதான் இப்படிப் பேசுறேள்”

“முதல்லே நீங்க நாங்கன்னு பேசறதை விடுங்கோ. உங்களுக்கும் எனக்கும் உள்ள உள்ளத் தொடர்பு இருக்கே அது வில்வண்டிலே தொடங்கிடுத்து”

“இது சாஸ்த்திர விரோதம்”

“எது சாஸ்த்திர விரோதம். சரி சரி, ரொம்ப நாளைக்கு அப்புறம் சந்திக்கறோம். சண்டை போட வேண்டாம். ஆனாலும் எனக்கு உங்க மேலேயும் கொஞ்சம் கோபம் உண்டு.”

“எதுக்கு?”

“நான் நன்னாப் பாடுவேன்னு உங்களுக்குத் தெரியுமோ இல்லியோ?

“ஒண்ணுரெண்டு சமயம் நீ பாடறதைக் கேட்டிருக்கேன்”
“இரயில்வே ஸ்டேஷனிலே எனக்காகப் பாரதி பாட்டைப் பாடச் சொல்லிக் கேட்டேனோ இல்லியோ. என்னையும் உங்களுக்காகப் பாடச் சொல்லிக் கேட்டிருக்கலாமே! “
“இரயில்வே ஸ்டேஷன்லே ஒரு பொம்மனாட்டியைப் பாடச் சொல்லலாமா? அது மட்டுமல்ல உண்மையிலேயே அது எனக்குத் தோணலே. அப்படியொரு மயக்கம்”
“உங்க கை அழுத்துன அழுத்திலே உங்க மயக்கம் எவ்வளவு தூரம்னு தெரிஞ்சுது.”
எனக்கு பாட்டுன்னா அவ்வளவு இஷ்டம். ஆனா இங்கே அதை ஆதரிக்கறவா யாருமே இல்லை. எங்க மாமியார் தான் ரொம்ப நன்னாப் பாடறதா நெனச்சிட்டதாலே என் மேலே பொறாமை. அதனாலே நான் பாடறதை விரும்பலே. எங்காத்துக்காரருக்குப் பாட்டுன்னா வேப்பங்காய். எங்க மாமனாருக்குப் பாட்டுக் கேட்க நேரமில்லே. அவருக்கு உடம்பு சரியாகப் போன பின்னாலே என்னைப் பாடச் சொல்லிக் கேட்பார்.”
“நீ கவிதையெல்லாம் எழுதரயாமே?”
“ஆமாம். எனக்குச் சின்ன வயசிலேயே தமிழிலே ஆர்வம் இருந்தது. தமிழ்க் கவிதைகளைப் பாடிப் பார்ப்பேன். உள்ளுக்குள்ளே கவிதை உணர்வு இருந்திருக்கும் போல இருக்கு. முதல்லே இலக்கணம் இல்லாம எழுதிப் பார்த்தேன். அப்புறம் இலக்கணம் நானே கத்துண்டு எழுத ஆரம்பிச்சேன். என் உள்ளத்திலே காதல் வாழ்க்கை வாழ்ந்திண்டிருக்கேனோ இல்லியோ அது ரொம்ப அழகா வெளிவந்துது. இப்பொல்லாம் நான் எழுதினா பத்திரிகையிலே போடறா. வெளியிலே போய்க் கவியரங்கங்களில் கலந்துக்கறேன். ஏதோ கொஞ்சம் நல்ல பேரு.”
“அது ஏன் சாம்பவின்னு பேர்வச்சுண்டே?”
“இது அறிவினாவா?”
“அப்படின்னா?”
தெரிஞ்சுண்டே கேக்கறது?”
சாம்பசிவம் சிரித்தார்.
“இப்போவாவது “ஒரு பாட்டுப் பாடு ”ன்னு என்னைக் கேக்கலாமில்லையா?”

“நீயோ ஆத்துக்காரரை இழந்துட்டு நிக்கறே, உன்னைப்போய் எப்படிப் பாடுன்னு நான் கேக்க முடியும்?”
“நான் இன்னொரு ஆத்துக்காரரோடே வாழ்ந்துண்டுதான் இருக்கேன். இதை நீங்க முற்போக்குன்னு சொல்லுங்கோ, பிற்போக்குன்னு சொல்லுங்கோ அல்லது திமிரு, ஆணவம்னு எதுவேணுமானாலும் சொல்லுங்கோ , எனக்குப் பிடிச்சிருக்கு. இப்படியே இருந்துட்டுப் போறேன்”
“சரி, நீ ஒரு பாட்டுப்பாடு. ”
“அப்பா, எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா?”
“வெளியிலேருந்து யாராவது கேட்டா என்ன நினைப்பா?”
“எங்க பாட்டு வாத்தியார்னு சொல்லிடுவேன். போய்க் கதவைச் சாத்திட்டு வரேன்”
“கதவைச் சாத்த வேண்டாம்.”
“ஏன் பயமா இருக்கா? நான் தான் ஏற்கனவே சொல்லிட்டேனே. இந்த உடம்பு உங்களுக்குச் சொந்தமில்லே. உங்க கைகூட என்மேலே பட விடமாட்டேன். கல்யாணத்துக்கு முன்னாலே கையைத் தொட்டதோடே சரி. ஆனா உள்ளம் முழுக்க நீங்கதான். இது என்ன வாழ்க்கையின்னு உங்களுக்குத் தெரியாது.”

எழுந்து சென்று கதவைச் சாத்திவிட்டு வந்தாள்.

“உங்களுக்கு எந்த மாதிரிப் பாட்டு வேணுமின்னு நான் கேட்கமாட்டேன். உங்களைப் பாக்க முடியாம நான் பாடிய பாட்டு எது தெரியுமா?
“எனக்கென்னம்மா தெரியும்?”
“பாரதியார் பாட்டுத்தான். பாடட்டுமா?”
“ஆசைமுகம் மறந்து போச்சே” என்ற பாரதியார் பாட்டைப் பாடினாள்.

ஆசை முகம் மறந்து போச்சே இதை-
யாரிடம் சொல்வேனடி தோழி
நேசம் மறக்கவில்லை நெஞ்சம் எனில் -
நினைவு முகம் மறக்கலாமோ
(ஆசை(

கண்ணில் தெரியுதொரு தோற்றம் அதில் -
கண்ணனழகு முழுதில்லை
நண்ணு முகவடிவு காணில் அந்த -
நல்ல மலர்ச் சிரிப்பைக் காணோம்
(ஆசை(

தேனை மறந்திருக்கும் வண்டும் ஒளிச் -
சிறப்பை மறந்துவிட்ட பூவும்
வானை மறந்திருக்கும் பயிரும் இந்த -
வையம் முழுதுமில்லை தோழி
(ஆசை(

கண்ணன் முகம் மறந்துபோனால் இந்த -
கண்களிருந்து பயனுண்டோ
வண்ணப் படமுமில்லை கண்டாய் இனி -
வாழும் வழியென்னடி தோழி
(ஆசை(

மிக உருக்கமாகப் பாடினாள். சாம்புவிற்குக் கண்களில் நீர் கசியத்தொடங்கியது. மீனாக்ஷி அழுது விட்டாள்.
“இது ஆனந்தக் கண்ணீர்” என்றாள் ..
எழுந்துபோய்க் கதவைத் திறந்துவிட்டு வந்தாள்.
“உங்களை நான் எப்படிக் கூப்பிடுவது?”
“ஏன், அண்ணாவென்று கூப்பிடு”
“அப்படியெல்லாம் என்னையே நான் ஏமாற்றிக் கொள்ள முடியாது. நீங்கள் என் உள்ளங்கவர் கள்வன்”
“அப்படியென்றால் கள்ளா என்று கூப்பிடு”
“ஊஹூம். கள் என்று தொடங்கினாலே குடி ஞாபகம் வந்துவிடும். இந்தச் சினிமாவிலெல்லாம் ஆத்துக்காரரை மாமா என்று கூப்பிடறாளே. அதே மாதிரி உங்களை மாமா என்று கூப்பிடறேன்”
“ஆமாம். உரிமையில்லாத உரிமையுள்ள ஆத்துக்காரர்”
“ஏன், வருத்தமா இருக்கா. என்னைத் தொடக்கூடாது என்று சொல்லிவிட்டேனேன்னு வருத்தப்படறேளா?
“இல்லை கண்ணம்மா. நான் பெருமைப் படறேன். உண்மையைச் சொல்றே, பூசி மழுப்பலே. எனக்குச்

சந்தோஷமா இருக்கு. இது , சினிமாவிலே சொல்வாளே அதை மாதிரி அதையும் தாண்டிப் புனிதமானது'' என்றார் சாம்பசிவம். இருவரும் சிரித்தார்கள்.
"நீங்க அடிக்கடி சினிமாவுக்குப் போவேளா?"
"எங்காத்துலே அவளுக்கும் பொண்ணு ரமாவுக்கும் சினிமான்னா பிடிக்கும். அதுனாலே அவாளைக் கூட்டிண்டு போவேன். அப்படியே நானும் பார்ப்பேன்''
"இந்தக் கரிசனம் தான் இங்கே இல்லாமல் போச்சு. உங்க பொண்ணு ரமாவைக் கூட்டிண்டு வாங்கோளேன். நான் அவளுக்குப் பாட்டுச் சொல்லிக்கொடுக்கிறேன். ''
"அவளுக்குக் கல்யாணம் நிச்சயமாயிருக்கு. எங்கிட்டே வேலை பார்த்துண்டிருந்த கோபால் எங்கிற பையனுக்குத் தான் கொடுக்கிறேன்''. அடுத்த மாசம் கல்யாணம்.''
"நான் நிச்சயமா வருவேன்''
"நீயில்லாமலா. நீயும் என் குடும்பத்திலே....''
"அப்படிச் சொன்னா எப்படி நான் சாம்பசிவத்தோடே உரிமையில்லாத உரிமை கொடுக்கிற பெண்டாட்டி'' என்று சிரித்துக்கொண்டே சொன்னாள்.
"உங்களைப் பார்த்த சந்தோஷத்திலே நீங்க என்ன சாப்பிடறேங்கன்னு கூடக் கேக்க மறந்துட்டேன். நானே ஏதாவது செய்து எடுத்துண்டு வரேன். சுகர் கிகர் ஏதாவது உண்டா?''
"அதெல்லாம் ஒண்ணுமில்லே''
"சரி இந்தப் புத்தகத்தைப் படிச்சுண்டிருங்கோ. இது நான் எழுதின கவிதைத் தொகுதி''
சாம்பசிவம் அவள் கொடுத்த கவிதைத் தொகுதியைப் புரட்டிப் பார்த்தார். கவிமாமணி இலந்தை இராமசாமி முன்னுரை எழுதியிருந்தார். அதில்
.
"சுயானுபவத்திலிருந்து வெளிப்படுகிற கவிதைகள் நிச்சயம் மனத்தை ஈர்க்கும். அவை கற்பனைக் குதிரையிலேறிய உண்மையின் வெளிப்பாடுகள். கவிஞர் சாம்பவியின் கவிதைகள் ஆத்மானுபவத்திற்காக எழுதப்பட்டவை. பலர் வேண்டிக்கொண்டதன் பேரில் அவற்றைத் தொகுத்து வெளியிடுகிறார். இவற்றில் விளம்பரம் இல்லை , வேடிக்கை இல்லை. எந்த விதமான வித்தையும்

காட்டப்படவில்லை, வினயம் இருக்கிறது. பக்தி வெளிப்பாடு இருக்கிறது. இயற்கை அழகு இருக்கிறது. எல்லாவற்றிற்கும் மேலாக ஆத்ம மனோலயம் இருக்கிறது”

ஒவ்வொரு கவிதையாகப் படித்துப் பார்த்தார்.

கண்ணம்மா ரவா உப்புமா செய்து சுடச்சுட எடுத்துக்கொண்டு வந்தாள். அதை ஒரு வெள்ளித்தட்டில் போட்டுக் கொடுத்தாள். அதில் நெய்மணம் வீசியது. சில முந்திரிகள் தலையை நீட்டிக்கொண்டிருந்தன.

“முன்னுரையப் படித்தேன். ரொம்ப நிதர்சனமா எழுதியிருக்கார். “
“ஆமாம். கவிமாமணி இலந்தை இராமசாமியைப் பத்திக் கேள்விப்பட்டதில்லையா?” என்று கேட்டாள் கண்ணம்மா.
“அவர் எழுதியுள்ள “கருமாரி அந்தாதி’யை நித்யப் பாராயணம் “செய்கிறேன் “என்றார் சாம்பசிவம்.

“இந்த மாதம் 27ந்தேதி மயிலாப்பூர் சீனிவாச சாஸ்த்திரி ஹாலில் இலந்தை இராமசாமி தலைமையில் கவியரங்கம் நடக்கிறது. “இன்னும் கொஞ்சம். “என்னும் தலைப்பு. நானும் கலந்து கொள்கிறேன். நீங்க அவசியம் வரணும் “ என்றாள்.
“நிச்சயமா வரேன். உன் கவிதையைச் சுவைப்பதற்கு முன்னாலே உப்புமாவைச் சுவைக்கிறேன்,” என்றார் சாம்பசிவம்.
“நீங்க உப்புமாவைச் சாப்பிட்டுண்டே இருங்கோ. நான் என் கவிதையில் ஒன்றைப் பாடுகிறேன்” என்றாள் கண்ணம்மா.
“சோடச உபசாரங்களுள் ஒண்ணு சங்கீதம். பாடு. கேட்கிறேன்”

“சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ சாம்பசிவா”
“நிறுத்து நிறுத்து. இதிலே என் பேர் வருதே”
“ஆண்டவன் பேரை நீங்க வச்சுண்டா சாம்பசதா சிவ சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ சாம்ப சிவா
உங்க பேர் வருதுன்னு அர்த்தமா?”

“சரி, சரி, பாடு”

தாங்கிச் சதாயெனுள் சாந்தி நிலாவிடச் சார்ந்தே உலாவிடும் சதாசிவா
ஆம்பல் நிலாவினுக் கேங்கும் மனோநிலை தாங்கிப் பராவுவேன் சாம்பசிவா
யாரும் தராமலே யாரும் வராமலே யானே கலந்தனன் சதாசிவா
கூம்பல் எனக்கிலை கூச்சம் எனக்கிலை கூடித்தொழுகிறேன் சாம்பசிவா
கோயில் எழுப்பினேன், கொண்டு நிறுத்தினேன், கொட்டம் அடிக்கிறேன் சதாசிவா
தாம்பில் பிணைத்துளேன் தாலி அணிந்துளேன் தப்ப முடியுமா சாம்ப சிவா
தாகம் தணிக்கவா தாவி அணைக்கவா, தங்கி இருக்கவா சதா சிவா!

சாம்பசிவம் பாட்டைக்கேட்டு உருகிப்போனார்.

”தாம்பில் பிணைத்துளேன்னு எழுதியிருக்கியே, அப்படின்னா என்ன அர்த்தம்.”

“தாம்புன்னா தாம்புக்கயிறு. தாம்புக் கயிற்றாலே யசோதை கண்ணனைக் கட்டிப்போட்டது போலே நான் கட்டிப் போட்டிருக்கிறேன்  என்று அர்த்தம்.”

“இப்படி ஒரு கோயில் எழுப்பி என்னைக் குடியிருக்க வச்சிட்டியே. “

“ஆமாம் சாமி”

“நானென்ன உனக்கு ஆமாம் சாமியா?

“அது என் உள்ளே இருக்கவரைத்தான் கேக்கணும்”

“எப்படி உன்னாலே இரண்டு ஆசாமியாப் பிரிஞ்சு இருக்க முடியுது.”

“அது எனக்குக் கைவந்த கலை”

“நீ பெரிய ஆளுடி” என்றார் சாம்பசிவம். பிறகு சமாளித்துக்கொண்டு “நான் அப்படிச் சொல்லியிருக்கக் கூடாது” என்றார்.

“உண்மைதான். வெளியிலே நான் வேறொருத்தர் பெண்டாட்டி. நீங்க டி போடக்கூடாது. மனசுக்குள்ளே வாங்கோ. என்ன வேண்டுமானாலும் சொல்லிக்குங்கோ. ”
“எனக்கு அப்படியெல்லாம் வரத் தெரியாது”
“நீங்க வரவேண்டாம். நானே இழுத்துக்கறேன்” என்றாள் கண்ணம்மா.
“உப்புமா ரொம்ப நன்னாயிருக்கு.”
“நன்னாத்தான் இருக்கணும். அதில் என் அன்பையல்லாவா குழைச்சிருக்கேன்” என்றாள் கண்ணம்மா.
” உன் பையனுக்கு இனி நானே கத்துக் கொடுக்கிறேன். அவன் வேறே எங்கும் ஜோலிக்குப் போகவேண்டாம். அவனுக்கு வேறு ஒரு நல்ல வேலையும் கிடைக்குமான்னு பார்க்கிறேன்” என்றார் சாம்பசிவம்.
“எங்களை இனி உங்ககிட்டே ஒப்படைச்சிட்டோம். நீங்க இனி அவனுக்கு என்ன வழி செய்தாலும் சரி. ஆமாம் நீங்க இன்னும் கொஞ்சம் இங்கே இருக்கக்கூடாதா?”
“உன் கவிதைத் தலைப்பை இப்பவே ஆரம்பிச்சிட்டே போலேயிருக்கே?”
“நீங்க என்ன சொல்றேள்?”
“இன்னும் கொஞ்சம். தானே தலைப்பு. இன்னும் கொஞ்சம் இருக்கக்கூடாதான்னு கேட்டியே”
“பரவாயில்லையே. எனக்கு ஐடியாக் கொடுத்திட்டீங்க.” என்று சிரித்தாள்
“கொஞ்சம் இருங்கோ. ஊரிலேருந்து மணத்தக்காளி வத்தல் புதுசா வந்திருக்கு. கொஞ்சம் தாரேன் . எடுத்துண்டு போய் மாமிட்டே கொடுங்கோ.” என்று சொல்லிக்கொண்டே உள்ளே போய் மணத்தக்காளி வத்தல் ஒரு டப்பாவில் போட்டுக் கொடுத்தாள். அவர் அதை எடுத்துக்கொண்டு வெளியேறினார். அவர் அவ்வீட்டில் பெற்ற அநுபவம் புதுமையாக இருந்தது. என்ன அதிசயப் பெண் அவள்!

அத்தியாயம் 16

# வந்தான் தலைமகன்

வில்லியம்ஸின் அலுவலகம், அவருடைய நாற்காலிக்கும் பின்னாலே திருவள்ளுவர் படம். கோபால் உள்ளே வந்தான். "சார் உங்களைப் பார்க்க ஒருத்தர் வந்திருக்கார். "என்று சொல்லி விசிட்டிங் கார்டைக் கொடுத்தான்.
"ராம் ரத்தன் சிங்" என்று எழுதியிருந்தது.
"அவரை வரச்சொல். நீ போய் மிஸ்டர் சாம்சிவத்தை எப்பப் பார்க்க வரலாம் என்று கேட்டுவா?" என்றார் வில்லியம்ஸ்.
ராம்ரத்தன் சிங் உள்ளே வந்தார். முப்பது வயதிருக்கும். சீக்கியர் போலத் தெரிந்தது.
"வெல்கம், பிளீஸ் பி சீட்டட்" என்றார் வில்லியம்ஸ்.
"மிஸ்டர் வில்லியம்ஸ் எனக்குத் தமிழ் தெரியும். நானும் தமிழன் தான். நீங்கள் தமிழ் பேசுவீர்கள் என்பதும் எனக்குத் தெரியும்"
"நிறையவே என்னைப் பற்றித் தெரிந்து வைத்திருக்கிறீர்கள்" மிஸ்டர் வில்லியம்ஸ், நான் நேரடியாகவே விஷயத்துக்கு வருகிறேன். உங்களுக்குச் சமையல் சாம்பசிவம் அய்யரைத் தெரியுமல்லவா?"
"நன்றாகத் தெரியும். அவரை நான் மதிக்கிறேன்.. அவர் என் ஃபிரண்ட், ஃபிலாசஃபர் அண்ட் கைட்"
"அவருடைய மகன் நான். சின்ன வயசில் ஊரைவிட்டு ஓடிப்போனவன். பெயர் ராமரத்னம்"
"ஆச்சர்யம்தான். நிசமாகவா சொல்கிறீர்கள்?"
"நிச்சயமாக"
"உங்களைப் பார்த்தால் சீக்கியர் மாதிரி இருக்கிறதே!"
"அதெல்லாம் ஒரு காரணமாக. நான் ஒரு பஞ்சாபிப் பெண்ணை மணந்திருக்கிறேன். இப்பொழுது நான் ஒரு இண்டஸ்ட்ரியலிஸ்ட். "
"உங்கப்பாவுக்குத் தெரிஞ்சா சந்தோஷப்படுவார். நீங்க திரும்பிவரவேண்டும் என்று மாரியம்மன் கோவிலில் கூழ்காய்ச்சி ஊற்றியதை நான் அறிவேன்"
"அப்படியா. ஆனாலும் இப்பொழுது என்னைப் பார்த்து என் கதையைக் கேட்டாச் சந்தோஷப் படமாட்டார். அவருக்கு எல்லாமே நேர்மையாக நடக்கணும். நான் எப்படி

எப்படியோ சம்பாதித்தேன். எப்படி எப்படியோ வாழ்ந்தேன். கள்ளக் கடத்தல் கும்பலோடு கொஞ்ச நாளிருந்தேன். அதுதவிர ஒரு பஞ்சாபிப் பெண்ணைக் கல்யாணம் செய்திருக்கிறேன்.''

''உங்கப்பாவைப் பற்றி எனக்கு நன்றாகவே தெரியும். உங்க வீட்டுச் சமையலறைக்குக் கூட என்னை அழைத்துப் போயிருக்கிறார். அவர் ஜாதி , மத வித்தியாசம் பார்க்கமாட்டார்.''

''கல்யாணத்தை வேணுமானா ஒத்துக்கலாம். ஆனால்.. சரி சரி.. அதைப்பற்றிப் பேச வேண்டாம். நான் அவரைப் பார்க்காமல் இருப்பதுதான் நல்லது. ஆனால் அவருக்கு நான் உதவி செய்யணும். அதற்கு நீங்க உதவணும்''

''நான் என்ன செய்யணும்''

''அவர் இனிமே சமையல் ஜோலிக்குப் போகக்கூடாது. நான் கேட்டரிங் கன்ஸல்டன்ஸி என்று ஒரு நிறுவனம் வச்சுருக்கேன். அதிலே பல இங்கிலீஷ் கேட்டரிங் புத்தகங்கள் போட்டிருக்கேன். வெளிநாட்டிலே இருக்கிற பிரம்மச்சாரிகள் கல்யாணம் பண்ணியும் தனியா வாழ்கிறவர்கள் இவர்களுக்காக எளிய முறையில் தென்னாட்டுச் சமையல் கலைப் புத்தகம் எழுதணும். அதை எங்கப்பாதான் எழுதணும். அவரை அதிலே தலைமை ஆலோசகராப் போடணும்''

''நல்ல ஐடியாதான். அவர் அதற்கு ஒத்துக்குவாரா என்று தெரியவில்லை. நான் ஒரு எம்.பி.ஏ. நிர்வாக இயல் படித்தவன். அவர் சமையல் வேலையிலே இருக்கிறபோது அவர் செய்கிற நிர்வாகத்தைப் பார்த்து வியந்திருக்கிறேன். அவர் அப்பப்போ சொல்வதெல்லாம் குறித்து வைத்திருக்கிறேன். நிர்வாகக் கொள்கைகள் என்று நாங்கள் எதையெல்லாம் படித்தோமோ அவை அவருக்குத் தெரியாமலே அவரிடம் வெளிப்படுவதைப் பார்த்திருக்கிறேன். ''சாம்புஸ் கோட்ஸ்'' என்று ஒரு புஸ்தகம் எழுதிக்கொண்டிருக்கிறேன்'' என்றான் வில்லியம்ஸ்.

''நீங்க மிகைப்படுத்திச் சொல்றீங்கன்னு நினைக்கிறேன்''

“இல்லவே இல்லை. உண்மையைத்தான் சொல்கிறேன். புஸ்தகம் வெளிவந்ததும் பாருங்களேன்”
“அதைப் பிரசுரிக்கும் வாய்ப்பை எனக்குக் கொடுங்களேன்”
“வேண்டாம். நான் ஏற்கனவே ஒரு வெளிநாட்டுக் கம்பெனியுடன் ஏற்பாடு செய்துவிட்டேன். இன்னும் அவரிடம் சொல்லவில்லை.”
“கேட்டரிங் கன்ஸல்டஸியின் கிளையை மெட்ராஸில் திறக்கப்போகிறேன். இடமெல்லாம் பார்த்துவிட்டேன். அதுக்கு உங்களிடம் வேலை பார்க்கும் கோபாலை நிர்வாகியாகப் போடலாம்னு நெனைக்கிறேன்.. அவனுக்குத்தானே என் தங்கையைக் கொடுக்கப் போகிறார்?” என்றான் ராம்ரத்தன்சிங்.
“ஆமாம். நல்ல பையன். அவனிடம் கேட்டுச் சொல்கிறேன்”
“அதுமட்டுமில்லே. தூரதர்ஷனிலே ஒரு சமையல் நிகழ்ச்சித் தொடர் என்னுடைய கேட்டரிங் நிறுவனம் ஸ்பான்ஸர் பண்ணும் அதை அப்பாதான் நடத்திக் கொடுக்கணும். அதுக்கு ஏற்பாடெல்லாம் நீங்கதான் செய்யணும்”
“பார்க்கலாம். என்னால் முடிந்ததைச் செய்கிறேன்”
“உங்க இண்டஸ்ட்ரீயிலே கூட என்னை ஒரு பார்ட்டனராச் சேர்த்துண்டா சந்தோஷப் படுவேன்”
மன்னிக்கனும், உங்களைப் பற்றி முழுதும் தெரிந்து கொள்ளாமல் என்னாலே சம்மதிக்க முடியாது. எங்க கம்பெனியிலே நான் ஒரு அட்வைஸர். அவங்களைக் கேட்கணும். அது தவிர நீங்க கொடுத்த விவரங்களை வைத்து என்னால் உங்க பேரை சிபாரிசு செய்ய முடியும் என்று தோன்றவில்லை”
“எங்க அப்பாவோடே பழகியிருக்கேளோ இல்லியோ, இப்படித்தான் பேசுவேள். நீங்களே இப்படிச் சொல்றேளே. அவர் இன்னும் எப்படிச் சொல்லுவார். அதனாலேதான் நான் யாரென்று அவருக்குத் தெரியக் கூடாதென்கிறேன். உங்களை மறுபடியும் எப்போ பார்க்கிறது? நான் இன்று பஞ்சாப் போகிறேன். ஒருவாரம் ஆகும் திரும்பிவர. “
“நீங்க வந்த பிறகு பார்க்கலாமே”
“இதுதான் என்னுடைய சண்டிகர் போன் நம்பர். ஒண்ணு சொல்ல மறந்துட்டேனே. என் தங்கை கல்யாணத்துக்கு நான்

ஏதாவது செய்தாகணும். நீங்களே ஒரு யோசனை சொல்லுங்களேன்?''

''அடுத்த வாரம் நீங்க வந்தப்புறம் பேசிக்கலாம்.''

''சரி நான் வரட்டுமா?''

இராமரத்தன்சிங் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் கோபால் வந்தான்.

''மாமாவோடே தம்பி ஊரிலிருந்து வந்திருக்காராம். அவரைக் கூட்டிக்கொண்டு மாமா எங்கோ வெளியிலே போயிருக்கார். ''என்றான்

''சரி, பரவாயில்லை. அப்புறம் பார்த்துக்கலாம். நீ ஒரு நிகழ்ச்சி சொன்னியே.. அதைத் திரும்பச் சொல்லு,''

''கிட்டா ஒரு சமயம் முந்திரிப் பருப்பைத் திருடிட்டான். மாமா அதைத் தெரிஞ்சிண்டும் அவனை அங்கே கண்டிக்கலே. வீட்டுக்கு வந்தப்புறம் அவனுக்குத் தண்டனை கொடுத்தார். ஆனால் அவன் வீட்டு சிரார்த்தத்துக்கு உதவி செஞ்சார்''

''இதுக்கு ஏதோ திருக்குறள் சொன்னியே''

''கடிதோச்சி மெல்ல எரிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டுபவர்.

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்''

''இந்தக் குறளெல்லாம் உனக்கு எப்படித்தெரியும்?''

''படிச்சிருக்கேன்''. அதுதவிர மாமா அடிக்கடி சொல்லுவார்.''

''நல்லது அந்தத் திருக்குறளின் இங்கிலீஷ் டிரான்ஸ்லேஷனை எடுத்துக் கொடுத்துட்டுப்போ. திருவள்ளுவர் மேனேஜ்மெண்டைப் பத்திச் சொல்லியிருப்பதெல்லாம் படிச்சா எனக்கே ஆச்சர்யமா இருக்கு.'''' என்றார் வில்லியம்ஸ்

கோபால் திருக்குறள் ஆங்கிலமொழி பெயர்ப்புப் புத்தகத்தைக் கொடுத்தான்.

வில்லியம்ஸ் திருக்குறளில் மூழ்கிப்போனார்

அத்தியாயம்.17

# கல்விக் கனவுகள்

சாம்பசிவம் வீட்டில் புதிதாக சோஃபா வாங்கிப் போட்டிருந்தார். அதில் அமர்ந்துகொண்டு பாரதியார் கவிதைகளைப் படித்துக் கொண்டிருந்தார். பக்கத்தில் திருக்குறள் புத்தகமும் இருந்தது. அவரது பெண் ரமாவின் கையில் அவரது மனைவி மருதாணி இட்டுக்கொண்டிருந்தாள்.

“சும்மா, அசக்காதேடி, நேரே உட்காரு. இப்படி அசைச்சுண்டே இருந்தா மருதாணி ஈஷிக்கும். அப்புறம் எனக்கென்ன? “என்று மகளை கடிந்து கொண்டே மாமி மருதாணியைச் சீர் செய்தாள். ரமா மீண்டும் அசைந்தாள்.

“சும்மா சும்மா அசக்காதடி. இங்கே பாருங்கோ உங்க பொண்ணை. கொஞ்சம் அசக்காம இருக்கச் சொல்லுங்கோ. நான் சொன்னாக் கேக்க மாட்டேங்கறா. பாரதி புஸ்தகத்தைக் கையிலே எடுத்துட்டா அவருக்கு வேறொண்ணும் தெரியாதே. “என்று புலம்பினாள் மாமி.

“அப்பா நீங்க ஏம்பா டயம் கிடைக்கிற போதெல்லாம் பாரதியார் கவிதைகளையும் திருக்குறளையும் படிக்கறேள். புதுசு புதுசா எத்தனை வருது.. அதெல்லாம் படிக்க மாட்டேளா?” என்று கேட்டாள்.

“எங்கப்பா ஒரு தமிழ் வித்வான். அவருக்கு ஒழிஞ்ச போதெல்லாம் எனக்குத் திருக்குறள் சொல்லிக் கொடுப்பார். எங்கப்பா சொல்லுவார்” சாம்பு பாரதியாரையும் திருக்குறளையும் படிச்சிட்டா , தமிழ் இலக்கியத்தில் பாதி படிச்சமாதிரி’ சொல்லுவார். அதனாலே எனக்கும் ஆர்வம் வந்துடுத்து. புதுசா ஏதேனும் படிக்கமாட்டேளான்னு கேட்டியே. அதோ அந்தப்பைக்குள்ளே ஒரு கவிதைப் புஸ்தகம் இருக்குப் பாரு அதை எடுத்துக் கொடு” என்றார் சாம்பசிவம்.

“உங்களுக்குக் கொஞ்சங்கூட யோசனையே இல்லை. அவள் இரண்டு கையிலும் மருதாணி போட்டிண்டு இருக்கா. அவள் எப்படி எடுத்துக் கொடுப்பாள்?” என்றாள் மாமி.

“சரி, நானே எடுத்துக்கறேன்” என்று சொல்லிப் பையைத் திறந்து கவிஞர் சாம்பவி எழுதின ”உள்ளம் எனும் உலகம்” என்ற கவிதைத் தொகுதியை எடுத்தார்.

“அப்பா அட்டையைக் காட்டுங்கோ?” என்றாள் ரமா

அவர் புஸ்தகத்தை அவளுக்கு நேராகத் திருப்பிக் காட்டினார்.

“ஓ கவிஞர் சாம்பவி புஸ்தகமா? அவங்களை நான் பார்த்திருக்கேனே! எங்க காலேஜ் முத்தமிழ் விழாவில் கவியரங்கிற்கு அவங்கதான் தலைமை வகிச்சாங்க. கொஞ்சம் முற்போக்கு வாதி. நல்ல கவிஞர். உனக்கெப்படி இந்தப் புஸ்தகம் கிடைச்சது?” என்று கேட்டாள்.

அவளுக்கு நேரிடையாப் பதில் சொல்லாமல் பாருவிடம் பேசினார்

“பாரு உனக்கு என்னுடைய சமையல் மாஸ்டர் அய்யாவாளைத் தெரியுமில்லையா?”

“என்ன இப்படிக் கேட்டுட்டேள். அவர்தானே நமக்குக் கல்யாணம் பண்ணிவச்சார். ரொம்ப நல்லவர்.”

” ஆமாம். அவருடைய மாட்டுப்பெண்தான் இந்தச் சாம்பவி. அய்யாவாள் வாதம் வந்து காலமாயிட்டார். அவருடைய பையனும் குடியினாலே நோயிலே விழுந்து செத்துப் போயிட்டான். இதைக் துக்கங் கேக்கப் போனேன். அப்பத் தான் தெரிஞ்சுது அவ தான் கவிஞர் சாம்பவின்னு. அவள்தான் இந்தப் புத்தகத்தைக் கொடுத்தா. நன்னா பாடுவா. நம்ம ரமாவை அவாத்துக்கு அனுப்பசொன்னா. பாட்டுக் கத்துக் கொடுக்கிறாளாம்” என்றார்

“என்னையும் கூட்டிண்டு போயிருக்கலாமே நீங்க.”

“கூட்டிண்டு போறேன். அவளுக்கு ஒரு பையனிருக்கான். 18 வயசிருக்கும். அவனை நம்ம வெங்கட்ராமயர்ட்டே சமையல் கத்துக்க அனுப்பறா. ரமா கல்யாண மண்டபத்துக்குச் சமீபத்திலே கேஸ் அடுப்புப் பத்தித் தெரிஞ்சுக்கப் போனேனில்லையா? அப்பப் பார்த்தேன்.. ரமா அவன் என் குருவுடைய பேரன் உனக்குத் தம்பி மாதிரி.” என்றார்

“அப்பா, என் அண்ணன் தான் எங்கோ போயிட்டான். தம்பி கிடைச்சா ரொம்ப சந்தோஷம் “ என்று சொல்லிக்கொண்டே “அப்பா ஒரு கடி ஜோக் சொல்லட்டா.” என்று கேட்டாள் ரமா.

“வேண்டாம்மா. பாரதியாரைப் படிச்சிண்டு இருக்கறப்போ எனக்கு உங்க அண்ணன் ஞாபகம் வந்துடுத்து. அப்பாவேலே படிக்க வைக்க முடியாதுன்னு தானே ஓடிப் போனான். இப்போ மாதிரி இருந்தேன்னா ஜாம் ஜாம்னு படிக்க வச்சிருப்பேன். நன்னாப் படிக்கறவா ஏழையா இருந்து அவாளுக்கு அரசாங்க சப்போர்ட்டும் இல்லாட்டா அவா விருப்பத்துக்குப் படிக்க முடியாத நிலை நாட்டுலே வந்துடுத்தே. பாரதி தீர்க்கதரிசி. இப்படி ஏழைகள் படிக்க முடியாமல் போயிடும்னு பாரதிக்குத் தெரியும் போலிருக்கு. அதனாலேதான்

“அன்ன சத்திரம் ஆயிரம் கட்டுதல்
ஆலயம் பதினாயிரம் நாட்டுதல்
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்” அப்படின்னு பாடியிருக்கார். கெட்டிக்காரனா இருந்தா அவன் எந்த ஜாதிக்காரனா யிருந்தாலும் படிக்க வாய்ப்பில்லாமல் போய்விடக் கூடாதில்லையா? ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்னு தானே பாடியிருக்கான். வெறுமனே எழுத்தறிவித்தல்னு பாடலியே. இப்ப என்ன நடக்கிறது. பணம் இருந்தாத்தான் பலர் பள்ளியிலேயே சேர முடியுது.”

பையனைப் பற்றிப் பேச்சு வந்ததும் மாமி அழத்தொடங்கினாள். அங்கிருந்த சூழ்நிலை இறுக்கமானது.

“அழாதேடி, அழாதே! பையன் எங்கேயோ சௌக்கியமாக இருப்பான். நல்லவனாக இருக்கணுமேன்னுதான் என் கவலை”

“அவன் எங்கேயாவது நன்னா இருந்தாப்போதும். நல்லவனாகத்தான் இருப்பான். உங்க பையன் கெட்டவனாக இருக்க முடியாது”

“அந்த நம்பிக்கைதான் முக்கியம். எனக்கு ஒரு ஆசை. கனவுன்னு கூடச் சொல்லலாம். நான் சாகறதுக்குள்ளே ஏழைகள் படிக்கறதுக்குன்னு ஒரு பள்ளிக்கூடம் கட்டணும். அதிலே பணக்காரங்களுக்கு இடமில்லை. ”

“நம்மாலே முடியுமா?” என்று கேட்டாள் ரமா.

“ஏன் முடியாது? உனக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்துட்டேன்னா அப்புறம் எனக்கு என்ன செலவு? அடுப்படியிலே வெந்தாலும் சரி பணம் சம்பாதிச்சு ஒரு

ஸ்கூல் கட்டியே தீருவேன். நம்ம ஊர்ப்பக்கம் போய் அங்கே கூடக் கட்டலாம்.''
“அப்பா கிராமப் புறங்களிலெல்லாம் படிக்கறதுக்கு எடம் கிடைக்கும். உங்க கனவை நனவாக்கணும்னா இந்தப் பட்டணத்திலேயே நடத்திக் காட்டணும்'' என்றாள் ரமா.
“போருமே, அப்பாவுக்கு ஏத்த பொண்ணுதான்'' என்றாள் மாமி.
“அப்படியே செய்யலாம்மா. அந்தப் பள்ளிக்கூடத்திலே , ரொம்ப நல்ல பள்ளிக்கூடம்னு சொல்றாளே அதைவிட நன்னா பாடம் சொல்லிக் கொடுக்கணும்.. கெட்டிக்கார ஏழைப் பசங்களுக்கு அவா எந்த ஜாதியா இருந்தாலும் அங்கே எடம் கொடுக்கணும்''
வாசல்பக்கம் தபால்காரரின் சைக்கிள் மணியோசை கேட்டது. ரமா சென்று தபாலை வாங்கிவந்து விரித்துப் படித்தாள்.
“ஹை, அப்பா நம்மாத்துக்கு டெலிபோன் சாங்ஷன் ஆயிடுத்து. “என்று குதித்தாள்.
“நல்ல சகுனம்தான். ஏன்னா, உங்க பள்ளிக்கூடத்திலே எனக்கும் ஒரு வேலைபோட்டுக் கொடுப்பேளா?'' என்றாள் மாமி.
“நீ என்னடி பண்ணுவே?''
“ஏன் மணியடிக்க மாட்டேனா?''
“போம்மா, சுத்தப் பத்தாம் பசலியா இருக்கியே. இப்போல்லாம் தண்டவளாத்தைக் கட்டி மணி அடிக்கறதில்லே. அதுக்கெல்லாம் எலக்ட்ரிக் பெல் வந்துடுத்து. அதுவும் அப்பா பள்ளிக்கூடம் என்ன சாதாரண பள்ளிக்கூடமா? ஒவ்வொரு ரூமிலேயும் ஸ்பீக்கர் வச்சுடுவார்'' என்றாள் ரமா.
“ஒரு ஆயா வேலையாவது கொடுங்களேன். ஆமாம். ஏழைகள் படிக்கணும்னா அவா சாப்பாட்டுக்கு என்ன பண்ணுவா?'' என்று கேட்டாள் மாமி.
பாரதியார் சொன்ன மூணும் அங்கே இருக்கும்.
“அதென்ன மூணு''
அன்னசத்திரம், ஆலயம், பள்ளி''
“அன்ன சத்திரம் சரி, எந்தக்கோயிலைக் கட்டுவேள்? எல்லாருக்கும் பொதுன்னு சொன்னதுக்கப்புறம் எந்தக்

கோவிலைக் கட்டுவேள். சிவன் கோவிலா, இராமர் கோவிலா, மசூதியா, சர்ச்சா?'' என்று கேட்டாள் ரமா.

"அதுக்கும் பாரதியார் வழி சொல்லியிருக்காரே! பள்ளித் தலமனைத்தும் கோவில்கள் செய்வோம்'' ஆமாம் பள்ளிக்கூடங்கள் எல்லாமே கல்விக் கோவில்கள். அதனாலே தனியாக் கோவில் எதுக்கு? ஒவ்வொரு வகுப்பறையும் ஒரு கோவில்தான்.'' என்றார் சாம்பசிவம்.

"கேக்கறதுக்கு எல்லாம் நன்னாத்தான் இருக்கு. நடக்கணுமே!''

"நடக்கும். நடத்திக் காட்டுவேன். "பாரதியார் புதிய ஆத்திசூடியிலே'' நினைப்பது முடியும்'' னு சொல்லியிருக்கார். நினைச்சுட்டேன். முடியும்''

"பாரதியார் எதையும் சொல்லாமல் விடலை போலிருக்கே. வள்ளுவர் எதையும் சொல்லலையோ?

"ஏன் சொல்லலே?

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர் திண்ணியர் ஆகப் பெறின்'' என்றார் சாம்பசிவம். அவருடைய எண்ணத்தின் வெறி அவரது கண்களிலே தெரிந்தது.

"உங்கம்மா பள்ளிக்கூடத்திலே வேலை போட்டுக் கொடுங்கோன்னு கேட்டாளோல்லியோ. வேலை கொடுத்திட்டேன். அன்ன சத்திரத்தில் சமையல்காரி வேலை. நான்தான் ஹெட் குக்.'' என்று சொல்லிச் சிரித்தார் சாம்பசிவம்.

"நம்ம வில்லியம்ஸை யோசனை கேட்போம். அவன் நல்ல ஐ\டியா கொடுப்பான்'' என்றாள் மாமி.

"பேஷாக் கேக்கலாமே''

"ஆமாம். நான் உங்களை ஒண்ணு கேக்கணுனு நெனெச்சேன். இந்த வில்லியம்ஸ் மேல் நீங்கள் ஏன் இவ்வளவு பாசம் காட்டறேள். "என்று வினவினாள் மாமி.

"அதுதாண்டி எனக்கும் தெரியலே. அதைப் பாசம்னு சொல்றதா , மரியாதைன்னு சொல்றதா ஒண்ணும் புரியலே. ஆனால் ஒண்ணு அவனிடம் உண்மை இருக்கு. அதுதான் எனக்குப் பிடிச்சிருக்கு. . வெளிநாட்டுக்காரன்தான். ஆனாலும் என்ன மரியாதை பாத்தியா?''

“அவன் கிறிஸ்துவன் என்ற எண்ணமே எனக்கு ஏற்பட மாட்டேங்குது. நன்னாத் தமிழ்ப்பேசறான்”
“ஆமாம். போனவாரம் ஒரு கல்யாணத்திற்குப் போறப்போ என்கூட ஒருநாள் இருந்து என் சமையல் வேலையைப் பாக்கணும்னு இவன் கேட்டுண்டான். கூட்டிண்டு போயிருந்தேன். தாலி கட்டறதுக்கு முன்னாலே இவனைக் கல்யாண மண்டபத்துக்குக் கூட்டிண்டு போனேன். அங்கே சாஸ்திரிகளெல்லாம் மந்திரம் சொல்லிண்டிருந்தா. ஒரு சேரைப்போட்டு அவனை உட்காரச் சொன்னேன். உட்கார மாட்டேன்னுட்டான். ஏன்னு கேட்டா சாஸ்த்திரிகளெல்லாம் வேதிக் ஸ்காலர்ஸாம்.எப்படி மனப்பாடமா வேதம் சொல்றா!. அவா முன்னாடி சேர்லே உட்காருவது மரியாதைக் கொறச்சலாம். அதே சமயத்திலே சில பிராமணப் பசங்க கல்யாண மண்டபத்துக்குக் கொஞ்சம் தள்ளி நிண்ணுண்டு சிகரட் பிடிச்சுதுகள். இதை எங்கே போய்ச் சொல்றது”

அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போதே வில்லியஸும் கோபாலும் வந்தார்கள்.
“வாப்பா வில்லியம்ஸ் உனக்கு நூறு வயசு “என்றாள் மாமி.
“இல்லேடி கழிஞ்சது போக நூறு வயசுன்னு சொல்லு. இப்போதாம்பா உன்னைப் பத்திப் பேசிக்கொண்டிருந்தோம்.” என்றார் சாம்பு.
“திங்க் ஆஃப் தி டெவில் அண்ட் தேர் இட் இஸ்” என்று சொல்லிச் சிரித்தான் வில்லியம்ஸ்.
“மாமி, ஒரு விஷயம் தெரியுமோ, மிஸ்டர் வில்லியம்ஸ் மாமாவைப் பத்தி ஒரு புஸ்தகம் எழுதிண்டிருக்கார்” என்றான் கோபால்.
“என்னைப் பத்தியா?” வியப்போடு கேட்டார் சாம்பு.
“இல்லை இல்லை, நீங்க சொன்னதைப் பத்தி எழுதிக்கொண்டிருகேன்” என்றான் வில்லியம்ஸ்
“நான் சொன்னதைப் பத்தியா, நான் ஒண்ணுமே சொல்லலியே!”
“உங்களுக்கே தெரியாது. நீங்க சொன்னீங்கன்னு. உங்க கல்யாண வேலையைப் பார்க்க ரெண்டு மூணுதரம் வந்தேனா, அப்போ பார்த்தது , கேட்டது” மற்றவர்களிடம்

விசாரித்தது உங்க தேசப்பற்று இதையெல்லாம்தான் எழுதியிருக்கேன்''
''என்னப்பா புரியாத புதிரா இருக்கு. அப்படி நான் என்ன செஞ்சேன். தேசப்பற்று என்பது எல்லாரிடமும் இருக்க வேண்டிய இயல்பான பண்பு. அது இல்லைன்னாத்தான் ஆச்சர்யமாப் பாக்கணும். . என்னைப் பெரிய மனுஷனாக்கிடாதே. நான் சாதாரண ஆள். அம்பாரியை ஆனை மேலேதான் வைக்கணும், பூனை மேலில்லே''
''யானை எது பூனையெதுன்னு எங்களுக்குத் தெரியும்'' என்றார் வில்லியம்ஸ்.
''இங்கேபாரு, ஒரு திருக்குறள் உண்டு. கல்லாதான் ஒட்பம் கழிய நன்றாயினும்
கொள்ளார் அறிவுடையார்''
நான் சொன்னதிலே ஏதாவது உனக்கு நல்லதாத் தெரிஞ்சா அது படிக்காதவனிடம் தப்பிவந்த புத்திசாலித்தனம் மாதிரி. ''ஏரல் எழுத்து'' ன்னு ஒண்ணு சொல்லுவா. அதாவது நத்தை போகிறபோக்கிலே  ஏதோ ஒரு பசையை உமிழ்ந்திண்டே போகும். அந்தக் கோடு சில சமயம் ''அ'னா மாதிரி, 'உ'னா மாதிரித் தோன்றும். அதைப் பார்த்துட்டுத் தமிழறிந்த நத்தைன்னு சொல்ல முடியுமா?''
''நான் அப்படிச் சொல்லலே. நீங்க என்னென்ன சொன்ணீங்கன்னு ஒரு சாம்பிள் தரட்டுமா?''
''சொல்லேன். கேட்கலாம்.''
''வெந்த கீரையிலே தண்ணீர் இருக்கிறபோது கடையக் கூடாது. அப்படிச் செய்தா மசியாது. தண்ணியை இறுத்துட்டுக் கடையணும். உறுதியா இருந்தா மசியும். அப்புறம் தளத்திக்கலாம். அதே மாதிரி மனுஷா முதலில் உறுதியா யிருந்தா வாழ்க்கை அவாளைக் கடையறபோது பக்குவப்பட்டுடுவா. அப்புறம் அவாளை எவ்வளவு வேண்டுமானாலும் தளத்திக்கலாம்.?''

''வேலையிலே மனசு லயிக்கணும். எத்தனை தடவைதான் ஜோலிக்குப் போயிருந்தாலும் இப்பொழுதுதான் முதன்முதலா ஜோலிக்கு வர்ற மாதிரி ஆர்வமாயும் பயபக்தியோடேயும் வேலை செய்யணும். பதறக்கூடாது. பதட்டப்படாம உன்னாலே காரியம் செய்ய முடியுமானா நீ

அதிர்ஷ்டக்காரன்னு அர்த்தம். சாப்பிடறவா சந்தோஷமாச் சாப்பிடற மாதிரி அயிட்டம் அமையணும்னு மனசார நெனைக்கணும். நம்ம சமையலைச் சாப்பிட்டு யாருக்கும் எந்தக் கெடுதலும் வரக்கூடாதுண்ணு பகவானை வேண்டிக்கணும்''

"எண்ணெயிலே வடை வேகற வரை அது சப்தம் போடும். வெந்துட்டுதானா சத்தம் அடங்கிடும். பக்குவமாயிடுத்துன்னு உடனே எடுத்துடணும். மனுஷனும் பக்குவமானா மௌனியாகிடுவான்''

'' கத்தரிக்கா ஒண்ணுதான். அதையே "ரஸவாங்கி", பிட்லை, எண்ணெய்க்கறி., வதக்கல், பைங்கன் பர்த்தா'' துவையல்னு விதவிதமாய்ப் பண்றோம். அதைமாதிரி மனுஷன் ஒண்ணுதான். சகவாசத்தாலேயும் அவன் வாழ்க்கை முறையாலேயும் வெவ்வேறாத் தெரியறான்.'' நாமதான் எல்லாத்திலேயும் கில்லாடின்னு நெனைக்கபடாது. நமக்குத் தெரியாதாத நமக்குக் கீழே வேல செய்யறவாட்டேக் கூடக் கத்துக்கலாம். ஏன், பொண்ணு,, பிள்ளை பெண்டாட்டிட்டேயிருந்தும் கத்துக்கலாம். "
"மைசூர்ப்பாகை ரெண்டுதரம் பொங்கிவந்ததும் இறக்கணும். இறக்குகி?ற போது முதல்லே விழற பாகுக்குக்கும் கடைசியிலே விழற பாகுகும் சூடு வித்தியாசத்தாலே நிறம் மாறிடும். ஒரு பகுதி பிரவுனாகவும் ஒரு பகுதி கருமஞ்சளாகவும் இருக்கும். டயம் தப்பினா விறைச்சுக்கும். மனுஷனும் நேரத்துக்குச் செயல்படாட்டா நிறமும் கெடும் தரமும் கெடும்.''
"சரக்கில்லாதவனைப் புகழ்வதாலே ஒண்ணும் கெட்டுப்போறதில்லை. சரக்கிருக்கிறவன் தப்புச் செய்யற போது அவன் தப்பைத் திருத்தாம புகழ்ந்துட்டா அவனும் கெட்டுப் போவான் மத்தவாளுக்கும் கெடுதல்''
"வில்லியம்ஸ், உம்பாட்டுக்கு எதையெதையோ சொல்லிண்டு போறயே. எல்லாம் நான் சொன்ன மாதிரி "ஏரல் எழுத்துத்தான்'' "என்றார் சாம்பசிவம்.
"அப்பா, நீ ரியலி கிரேட் அப்பா: என்று சொல்லிக் கொண்டே "அப்பா இன்னிக்குக் காலையிலே என்ன

சொன்னே “ நாம காலத்தை வீணாக் கழிச்சா காலம் நம்மைக் கழிச்சிடும்” . இனிமே நான் உங்கிட்டப் பேசறபோது நான் ஒரு பேப்பரும் பேனாவும் கையிலே வச்சுக்கப் போறேன்” என்றாள் ரமா , பார்வதியைப் பார்த்து,”அம்மா, அப்பா உங்கிட்டே தனியா எத்தனையோ பேசியிருப்பாரே, அதையெல்லாம் கொஞ்சம் சொல்லேன் “ என்றாள்.

“வாயாடி, சும்மா இருடி” என்றாள் பார்வதி.

வில்லியம்ஸ் பெரியவாளெல்லம் சொல்லியிருக்கிறதை, நான் அப்பப்போ சொல்லுவேன். அதில் என் சொந்தச் சரக்கு எதுவும் கிடையாது. அதனாலே இதுக்கெல்லாம் என்னைச் சொந்தக்காரன் ஆக்காதே. “ஒருத்தரைக் குழிபறிச்சுக் கீழே தள்ளணும்னா அவாளைப் புகழ்ந்து தள்ளு” ன்னு சொல்லுவா. நீங்க எல்லாம் என்னைப் புகழறேள்” என்றார் சாம்பசிவம்.

“அப்பா, இதையும் எழுதிக்கிறேன்” என்றாள் ரமா.

“ஏன், தாடிவச்சவாட்டத்தான் தத்துவம் வரணுமா, அடுப்படியிலே வரக்கூடாதா?” என்றாள் மாமி

“வில்லியம்ஸ் நீ என்பேரை இதிலே சேர்க்கக்கூடாது. “என்றார் சாம்பசிவம்.

“மாமி ஏற்கனவே தலைப்புக் கொடுத்தாச்சு. அடுப்படிச் சங்கீதம்”னு வைக்கிறேன்”

“வேண்டாம். அடுப்படி இராகங்கள்” னு வையுங்கோ” என்றான் கோபால்.

“நன்றாக இருக்கிறது. “ம்யூசிங்ஸ் அட் தி ஓவன்” என்று பேர்கொடுக்கிறேன்” என்றார் வில்லியம்ஸ். . மேலும் தொடர்ந்து “இன்னும் ஆறு மாசத்திலே புஸ்தகம் தயாராகிடும். அப்புறம் பாருங்களேன். இன்னொரு விஷயம்..” என்று இழுத்தார் வில்லியம்ஸ்.

“என்ன?”

உங்களிடம் கொஞ்சம் தனியாகப் பேசணும்”

“அப்படி என்னப்பா ரகசியம். சரி, சரி , நீங்களெல்லாம் உள்ளே போங்கோ. கோபால் நீயும் போ. வில்லியம்ஸ் வா, நாம வெளியிலே போய்ப் பேசலாம்” என்றார் சாம்பு.

“எனக்குத் தெரிந்தவர் ஒருவர், பஞ்சாபிலிருந்து வந்திருக்கார். பெரிய பணக்காரர். அவருடைய மாமனார்

பெரிய தேசத் தியாகி சர்தார் விக்கிரம் சிங். . சர்தார் பகத் சிங்கிற்குத் தூரத்து உறவு.
“சர்த்தார் பகத் சிங்கா? எவ்வளவு பெரிய தேசபக்தன் தெரியுமா? அவருக்குச் சொந்தக்காரர்னா இவரும் பெரியாளாத்தான் இருக்கணும். சரி சொல்லு அவருக்கென்ன?”
“எண் நண்பருக்கு 30 வயசிருக்கும். ராம்ரத்தன்சிங்னு பேர். அவர் கேட்டரிங் கல்சல்டன்ஸின்னு ஒரு கம்பெனி வச்சிருக்கார்.”
“அப்படின்னா?”
“சமையல் ஆலோசனை சேவை” ன்னு அர்த்தம்
“பரவாயில்லையே!
“அவருக்கு உங்க உதவி தேவை”
“உதவின்னு கேக்கறவாளுக்குச் செய்யவேண்டியதுதான். அதுவும் தேசபக்தக் குடும்பம். என்ன உதவி வேணுமாம்”
“நீங்க சமையல் புஸ்தகம் எழுதணுமாம். “
“நானா. எனக்கு ஒண்ணும் கோர்வையா எழுதத் தெரியாதே ”

“நீங்க சொல்றதைத் தொகுத்து எழுதிக்கொடுக்க ஆள்வச்சுக்களாம்”
““நான் என்னதான் எழுதணும்”
“வெளிநாட்டிலே இருக்கிற தமிழர்களுக்கு ”அவசரச் சமையல்” பத்தி எழுதணும். நம்மை மாதிரி விஸ்தாரமாச் சமையல் செய்ய அவர்களுக்கு நேரமில்லை.”
“எனக்கும் எழுதறதுக்கு நேரமில்லையே”
”நீங்க சமையல் வேலையை விட்டுடணும்”
“அதை மட்டும் சொல்லாதே. அதுதானே எனக்கு உயிர். அதை எப்படி விட முடியும். இந்தச் சமையல் வேலையிலே கொஞ்சநாளைக்கு ஒதுங்கி இருந்தேன்னு வச்சுக்கோ வாடிக்கைகக்காரா மறந்துருவா. திரும்ப வேலையைத் தொடர முடியாது.”
“உங்களுக்கும் வயசாகுதில்லையா?
“நான் என்ன அரசாங்க உத்தியோகமா பண்றேன். எங்களுக்கெல்லாம் ஓய்வே கிடையாது. நான் என்ன நிர்வாகம்தானே பண்ணப் போறேன். மற்றதையெல்லாம் எங்கிட்ட வேலை செய்யற ஆள்கள் பாத்துப்பா.

அதுக்கெல்லாம் ஆள்களைத் தயார்பண்ணி வச்சுருக்கேன். அதுமட்டுமில்லே. எனக்குன்னு சில கனவுகள் இருக்கு, அதை நிறைவேத்தப் பணம் சம்பாதிக்கணும். அது மட்டுமில்லை. என்கூட என்னை நம்பிப் பத்துப் பேர் இருக்கா. நான் ஜோலியை விட்டா அவா எங்கே போவா?''
“நீங்க அந்தக் கன்ஸல்டன்ஸியில் ஆலோசகராகச் சேர்ந்தா நிறையப் பணம் வரும். ரிமோட் கேட்டரிங்க் பிரிவு ஒண்ணு ஆரம்பிக்கலாம். அதுலே உங்களுடைய பத்துப் பேருக்கும் வேலை போட்டுக் கொடுத்திடலாம்.''
“அதென்ன ரிமோட் கேட்டரிங்.''
“ஆர்டருக்கு சப்ளை செய்வது. சின்னச் சின்னப் பார்ட்டிகளுக்குத் தரமான உணவு நியாயமான விலையிலே சப்ளை பண்ணுவோம்.''
“அதுக்கு இடம் வேணும். சாமான் வசதி இருக்கணும். வண்டி வேணும்''
“அதையெல்லாம் ராம்ரத்தன்சிங் பார்த்துக்கொள்வார். “
“அவரை முன்னே பின்னே நமக்குத் தெரியாது. அவர் எப்படிப்பட்டவர்னு தெரியாம எப்படிச் சம்மதிக்கறது. “
“எனக்கு நன்றாகத் தெரியுமே, இதைச் சொல்லும் போது குரலில் அவ்வளவு உறுதியில்லை. பொய் சொல்லுகிறோமே என்ற உறுத்தல் இருந்தது. இருந்தாலும் நல்லதுக்குப் பொய் சொல்லலாம் என்று சமாதானப் படுத்திக் கொண்டார் வில்லியம்ஸ்.
“எண்ணித்துணிக கருமம் னு சொல்லியிருக்கா. அதனாலே ஒன்றுக்கிரண்டா விசாரிக்கணும். நீ தீர யோசிச்சுத்தான் செய்வே. எதுக்கும் ரமாவின் கல்யாணம் முடியட்டும். அப்புறமா முடிவெடுக்கலாம். “
“அதுவும் சரிதான். ராமரத்தன் சிங் அவரது கேட்டரிங் சர்வீஸில் கோபாலைச் சென்னைக் கிளை மேனேஜராப் போடணும்னு ஆசைப்படறார். கோபாலுக்கும் அது நல்லதுன்னு நெனைக்கிறேன்.''
“அவனுக்கு எது நல்லதுன்னு நீ நினைக்கிறியோ அப்படியே செய். கோபாலிடமும் கேட்டுக்கோ. எனக்கென்னவோ அவன் உன்னிடம் இருப்பதுதான் நல்லதுன்னு படுது''
அப்பொழுது மாமி வெளியே வந்தாள்.

“வில்லியம் , உன்னை அந்தக் கடவுள்தான் எங்ககிட்டே கொண்டு சேர்த்திருக்கார். ரமாவுடைய அண்ணன் சின்ன வயசிலேயே ஓடிப்போயிட்டான். ஆச்சு விளையாட்டா 15 வருஷம் ஓடிப்போச்சு. நீதான் ரமாவுக்கு அண்ணனா இருந்து கல்யாணத்தை நடத்திக் கொடுக்கணும்””

“நான் அதை வழிமொழிகிறேன்”

“அம்மா, வேணுமின்னா பாருங்களேன். கல்யாணத்துக்கு உங்க பையனே வந்துருவார்” என்றார் வில்லியம்ஸ்”

“உன் வாய் முகூர்த்தம் அப்படியே நடக்கட்டும். அவன் வந்தாலும் நீ ஒதுங்கிடக் கூடாது. நீயும் அண்ணன்தான்”

“நான்தான் மாப்பிள்ளைக்குக் குடைபிடிப்பேன். கவலையே வேண்டாம்” என்றார் வில்லியம்ஸ்.

அத்தியாயம் 18

# கல்யாணமாம் கல்யாணம்

ரமாவின் கல்யாணத்திற்காக எல்லோரும் முதல்நாள் காலையிலேயே கல்யாணச் சத்திரத்துக்குச் சென்றுவிட்டார்கள். மாப்பிள்ளை வீட்டில் சொந்தக்காரர்கள் அதிகமில்லை. சாம்பசிவம் பிரபலமானவராயிற்றே.! ஆயிரம் பேருக்குக் குறையாமல் கூட்டம் வரும் என்று எதிர்பார்த்தார்கள். கிட்டா தனது சகாக்களுடன் முன்னதாகவே வந்துவிட்டான். தான் சமையல் கூடத்துப் பக்கம் எட்டிக்கூடப் பார்க்கப் போவதில்லை என்று சாம்பசிவம் சொல்லிவிட்டார்.

அடுப்பைப் பற்றவைக்கத் தொடங்குமுன் கிட்டா அவர் காலில் விழுந்து ஆசிபெற்றுக் கொண்டான்.

ராமரத்தன்சிங் தனது மனைவியுடன் முதல்நாள் மத்தியானம் சத்திரத்துக்கு வந்தான் . அவனோடு வில்லியம்ஸ் வந்திருந்தார். ராமரத்தன் சிங்கைப் பார்த்த போது அவனை எங்கோ பார்த்திருப்பதைப் போன்ற உணர்வு சாம்பசிவத்துக்குத் தோன்றியது. ராமரத்தன் சிங்கின் முகத்தில் தாடியிருந்ததாலும் அம்மைத் தழும்புகள் இருந்த காரணத்தாலும் அடையாளம் காண இயலவில்லை.

வில்லியம்ஸ் ராமரத்தனைச் சாம்பசிவத்துக்கு அறிமுகப்படுத்தினார். “ராமரத்தினத்துக்கும் அவரது மனைவிக்கும் இந்தப் பக்கத்துக் கல்யாணம் ஒன்றை முழுமையாகப் பார்த்து அதிலே கலந்துகொள்ள வேண்டுமென்ற ஆசை. எங்கிட்டச் சொன்னார்” என்றார் வில்லியம்ஸ்.

“பேஷா, இன்னிக்கும், நாளைக்கும், ஏன் கட்டுச் சாதம் கட்டிப் போகிற வரைக்கும் எங்க கூடவே இருக்கட்டுமே, எனக்கும் சந்தோஷந்தான்.” என்றார் சாம்பசிவம்.

“ராமரத்தன் தமிழ்நாட்டிலே பிறந்து வளர்ந்தவர்தான். இவருடைய அப்பா கேட்டரிங் டெக்னாலஜியில் பெரிய ஆள். இவரும் தமிழ் பேசுவார்”

“அப்போ எங்க குலம்னு சொல்லு”

“இதிலென்ன சந்தேகம்”

“இன்னொன்னு பார்த்தியோ. இவர் பேரு ராமரத்தன் சிங். என் பையன் பேரு இராமரத்தினம். இவனுடைய அப்பாவும் சமையல் சம்பந்தப்பட்டவர்” என்றார் சாம்பசிவம்.

“என் மனைவி மதுவந்தி நன்றாக ‘மெஹந்தி வரைவாள். உங்க பெண்ணுக்கும் போடச் சொல்லட்டுமா?” என்று கேட்டான் ராமரத்தன்சிங்.
“மெஹந்தியா? அப்படியென்றால்,....”
“அப்பொழுது அங்குவந்த ரமா” மெஹந்தின்னா மருதாணி. அப்பா எனக்கும் போட்டுக்கணும்னு ஆசை. இவாளெல்லாம் நன்னா மெஹந்தி போடுவா?” என்றாள் ரமா.
“அப்படின்னா அம்மாட்டே சொல்லிட்டுப் போட்டுக்கயேன். இருங்கோ எங்க ஆத்துக்காரியைக் கூப்பிடறேன். டே மூர்த்தி , போய் மாமியைக் கூட்டிண்டு வா?” என்றார் சாம்பு.
மாமி அவசரம் அவசரமாக வந்தாள். வரும் போது கொசாம் புடவை காலைத் தடுக்கிவிட்டது. மாமி கீழே சாய்ந்தாள்.
“அம்மா” என்று கத்திக்கொண்டே ராமரத்தன் பாய்ந்துசென்று மாமியைத் தாங்கிக் கொண்டான்.
“மெதுவா வரப்படாதோ. நல்லவேளை ராமரத்தன்சிங் தாங்கிக் கொண்டான். இல்லையென்றால் அடிபட்டிருக்குமே” கல்யாண சமயத்திலே அடிபட்டா என்ன ஆகறது” என்று பதறினார் சாம்பசிவம்.
“அம்மா, ஒண்ணும் அடிபடலையே” என்று கேட்டான் ராம்ரத்தன் சிங்
“இல்லையில்லை. ரொம்பத் தேங்க்ஸ்” என்றாள் மாமி.
“ராம்ரத்தன் சிங்குடைய சம்சாரம் நன்னா மருதாணி இடுவாளாம். இவாளெல்லாம் பஞ்சாப் காரா. பொண்ணுக்குக் கைக்கு மருதாணி இடச்சொல்லட்டுமான்னு கேட்டார். அதைச் சொல்லத்தான் உன்னைக் கூப்பிட்டேன்.” என்றார் சாம்பசிவம்.
“நானும் நெனச்சிண்டு இருந்தேன்னா. கைக்கு மட்டுமென்ன காலுக்கும் இடட்டுமே. இப்போ மருதாணிக்கு எங்கே போறது?” என்றாள் மாமி.
“அதை அவளே கொண்டு வந்திருக்கிறாள்.” என்றான் ராமரத்தன் சிங்
“ரொம்ப நன்னாத் தமிழ் பேசறேளே! எம் பையன் பேரும் இராமரத்னம் தான். நீங்களும் என் பையன் மாதிரித்தான். பேர்ப்பொருத்தம் கூட இருக்கே. கிட்டத்தட்ட உங்க வயசுதான் அவனுக்கும் இருக்கும். ” என்றாள் மாமி.
“நான் பிறந்து வளர்ந்ததெல்லாம் தமிழ்நாட்டில்தான். என்னைப் பையன் மாதிரின்னு சொல்லிட்டீங்க. அதனாலே இனிமே அம்மா, அப்பா என்றே கூப்பிடுகிறேன்” என்றான். இரண்டு பேரு இப்படி நில்லுங்கோ. நாங்க நமஸ்காரம் பண்ணிக்கிறோம்” என்றான் ராமரத்தன். இராமரத்தன் சிங்கும் மதுவந்தியும் அவனது மகனும் அவர்களுக்கு நமஸ்காரம் செய்தார்கள்.

""தீர்க்காயுசா நன்னா இருங்கோ" என்று மாமி ஆசீர்வாதம் பண்ணினாள்.
" வாம்மா, ,வா , உள்ளே போகலாம்" என்று மதுவந்தியை அழைத்துக்கொண்டு உள்ளே சென்றாள்.
ரமா ஹிந்தி படித்திருக்கிறாள். அதனால் அந்தப் பஞ்சாபிப் பெண்ணோடு பேசுவது எளிதாக இருந்தது. மெஹந்தி வரைகிற கலை வடநாட்டுப் பெண்களுக்கே கைவந்த கலை போலும். பஞ்சாபில் கல்யாணப் பெண்ணுக்கு மெஹந்தி இடுகிறதையே ஒரு விழாவாகக் கொண்டாடுவார்களாம். இரண்டு மணிநேரம் கையைப் பொறுமையாகக் காட்டிக் கொண்டிருந்தாள் ரமா. இங்கெல்லாம் உள்ளங் கைகளில் தான் மருதாணி இடுவோம். ஆனால் மதுவந்தி ரமாவின் புறங்கைகளிலும் மணிக்கட்டுக்கு மேலும் மெகந்தி வரைந்தாள். கண்களின் ஓரங்களில் வெள்ளைப்புள்ளிகள் வைத்து வரைந்தாள்.. அந்த கோலத்தில் ரமாவின் அழகு இன்னும் கூடியது. அந்தக் கோலத்தில் தன்னைப் பார்க்கக் கோபால் அந்தப்பக்கம் வருவானா என்று அவளது கண் தேடியது. மருதாணி இடுகிற அழகைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர் பல பெண்கள்.
"மாமி, எனக்கும் போடுவேளா? "என்று கேட்டாள் ஒரு சிறுமி. மதுவந்தி வந்த ஓரிரு மணிகளுக்குள் பிரபலமாகிவிட்டாள். பல பெரிய பெண்மணிகளும் அவளிடம் கையை நீட்டினர். அன்று மருதாணித் திருவிழாவாகவே ஆகிவிட்டது.
மெஹந்தி போட்டு முடித்தவுடன் சின்னக் குழந்தையைப்போல அப்பாவிடம் ஓடினாள் ரமா.
"அப்பா, பார்த்தீங்களாப்பா, என்ன அழகாப் போட்டிருக்காங்க" என்றாள்.
"ஜமாய், உனக்கு யோகம் தான். ரமா அந்தப் பொண்ணுக்குத் தமிழ் தெரியாது. நன்னாக் கவனிச்சுக்குங்கோ" என்றார் சாம்பசிவம்.
சாம்பசிவத்தின் தங்கை கல்யாணத்திற்கு வந்திருந்தாள். ரமாவின் கல்யாண ஏற்பாடுகளைப் பார்த்தவுடன் தன் பையனுக்கு அவளைத் திருமணம் செய்துகொள்ளாமல் போய்விட்டோமே என்று உள்ளூர வருந்தினாள்.
கிட்டா காபி கொண்டுவந்தான்.
"எல்லோருக்கும் காபி கொடுக்கச் சொல். ஏ கிட்டா, நீ இன்னிக்கு ஹெட் குக். .. நீ இப்படியெல்லாம் காபி கொண்டுவரக் கூடாது. ஆட்களிடம் கொடுத்தனுப்பு. இன்னிக்குச் சாயாங்காலம் என்ன ஸ்வீட்?" என்று கேட்டார்.

"கிட்டாக்" என்றான் கிட்டா
"படவா, எங்கிட்டேயே உன் கைவரிசையைக் காட்டுறயா? என்ன வேணாலும் செய். நான் ஒண்ணும் கேக்கப் போவதில்லை." என்றார் சாம்பு
"நீங்க கேக்காமலே நான் கொடுப்பேன்" என்றான் கிட்டா.
"படவா, படவா. நான் அதைச் சொல்லலேடா. நான் உன் சமையல்லே தலையிடப் போறதில்லைன்னு சொன்னேன். சரி, சரி. கல்யாணி மாமியை அனுப்பிப் பொம்மனாட்டிகளையும் கவனிக்கச் சொல்." என்றார்.
கல்யாணத்தைத் தடபுடலாக நடத்தச் சாம்பசிவம் விரும்பவில்லை. ஆனால் அவர் கல்யாண அழைப்பிதழைக் கொடுக்கப் போனபோது சில பெரிய மனிதர்கள் அவர்களாகவே ஒவ்வொரு பொறுப்பையும் ஏற்றுக்கொண்டார்கள்.. மறுத்துப் பார்த்தார் சாம்பசிவம். முடியவில்லை. அன்புக்குக் கட்டுப்பட்டார்.
டெலிபோன் அதிகாரி தஞ்சாவூர் இரட்டை நாயனம் ஏற்பாடு செய்துவிட்டார்.
சத்திர வாடைகைப் பணத்தைக் கொடுத்ததோடு கெமிக்கல் ஃபாக்டரி இராமசேஷன் மாலையிலே மெல்லிசை நிகழ்ச்சிக்கும் ஏற்பாடு செய்துவிட்டார்.
வில்லியம்ஸ் கல்யாணத்துக்கு வேண்டிய பூச்செலவோடு மாப்பிளைக்குச் சூட்டுக்கும் ஏற்பாடு செய்துவிட்டார்.
சாஸ்த்திரிகள் கல்யாணம் செய்து வைக்க "ஒரு ரூபாய் கொடுத்தால் போதும்" என்று சொன்னார்.
"இந்த ஒரு ரூபாய்ச் சம்பள விவகாரமே வேண்டாம் ஸ்வாமி. உங்களுக்குத் தட்சணை கொடுக்காவிட்டால் கன்னிகாதானம் கொடுத்த புண்ணியம் எனக்குக் கிடைக்காது" என்று சொல்லிச் சாஸ்த்திரிகளின் வேண்டுகோளை மறுத்துவிட்டார்.
சமையல் காரர் வீட்டுக் கல்யாணம் ஒரு ஜமீந்தார் வீட்டுக் கல்யாணம் போல் நடந்தது. ஒவ்வொரு பொறுப்பையும் ஒவ்வொருவர் தனித்தனியாக ஏற்றுக்கொண்டு செய்ததாலே சாம்பசிவம் வந்தவர்களைத் த்னித்தனியாக வரவேற்க முடிந்தது.
ஜானவாசத்திலே தஞ்சாவூர் நாயனக் கோஷ்டி தன் சாமர்த்தியத்தை எல்லாம் காட்டியது.
கவிஞர் சாம்பவி தன் மகனுடன் கல்யாணத்திற்கு வந்திருந்தாள். மாமி அவளை வரவேற்றாள். மாமி எதையோ கேட்க வாய் திறந்தபோது" மாமி வேறு எதைப்பத்தியும் கேட்க வேண்டும். இது மங்களகரமான நிகழ்ச்சி." என்றாள் சாம்பவி

காசியாத்திரையின் போது வில்லியம்ஸ்தான் மாப்பிள்ளைக்குக் குடைபிடித்தான். வில்லியம்ஸுக்கென்று சாம்பசிவம் பட்டு வேட்டி அங்கவஸ்த்திரம், சட்டை வாங்கியிருந்தார். .ஒரு வெள்ளைக்காரன் மாப்பிளைக்குக் குடைப்பிடிப்பதைப் பற்றிப் பலரும் வியந்து பேசிக்கொண்டார்கள்..

சாம்பவிக்கும் அவள் பையனுக்கும் மறக்காமல் புத்தாடைகள் வாங்கியிருந்தார்
இராமரத்தன் சிங் பஞ்சகச்சம் கட்டிக்கொண்டு நீலக் கோட்டுப் போட்டுக்கொண்டு தலையில் டர்பன் அணிந்துகொண்டு தாடிவைத்த சாமியார் போலக் காட்சியளித்தான். ஊஞ்சலின் போது மதுவந்தி பஞ்சாபிப் பாடலொன்று பாடினாள். கவிஞர் சாம்பவி ஊஞ்சலின் போது பாடினாள். அவள் குரல் மிக இனிமையாக இருந்தது. கல்யாணம் மிக விமரிசையாக நடந்தது. மச்சினன் சார்பில் பொரியிட ராமரத்தனை அனுமதிக்கும் படி சாம்பசிவத்தை வில்லியம்ஸ் வேண்டினான்.
“எனக்கு ஒண்ணும் ஆட்ஷேபனை இல்லை. பொம்மனாட்டிகள் ஏதாவது சொல்லுவா. பாருவிட்டே கேட்டுச் சொல்கிறேன்” என்றார் சாம்பசிவம். மாமியிடம் கேட்டபோது
“என்னை ஏன் கேட்கறேள். அவனைப் பார்க்கிறபோது நம்ம பையன் இராமரத்னம் ஞாபகம் வரது. அவனே பொரியிடட்டும்” என்றாள் மாமி.
பொரியிட்டதற்காக கோபால் அவனுக்கு நூற்றியோரு ரூபாய் கொடுத்தான். வாங்கிப் பத்திரமாக வைத்துக்கொண்டான் ராம்ரத்தன். ரமாவுக்குக் கல்பதித்த நெக்லஸ் ஒன்று பரிசளித்தான் ராம்ரத்தன். நலுங்கின் போது மீண்டும் மதுவந்தி பாடினாள். வில்லியம்ஸ் ஆங்கிலப் பாடல் ஒன்றைப் பாடினான்.
கிட்டாவின் கல்யாணச் சமையலை எல்லாரும் பாராட்டினார்கள். அவனுக்கு எல்லோர் எதிரிலும் மோதிரம் அணிவித்துப் பாராட்டினார் சாம்பசிவம்.
அந்தக் கல்யாணம் பலநாட்களுக்குப் பேசப்பட்டது.
ராமரத்தன் டார்ஜிலீங்கில் கல்யாணத் தம்பதிகளின் ஹனிமூனுக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொடுத்தான்.

## அத்தியாயம். 19

# அடுப்படி இராகங்கள்

சாம்பசிவம் வில்லியம்ஸின் மேல் வைத்த நம்பிக்கையைப் போல் ராம்ரத்தன் சிங்கிடம் வைக்க முடியவில்லை. அவனை ஒரு வியாபாரியாகவே அவர் பார்த்தார். கோபால் அவனுடைய கன்ஸல்டன்ஸியில் மேனேஜராகச் சேர்ந்தான். கோபால் வில்லியம்ஸிடம் பார்த்த வேலையை கவிஞர் சாம்பவியின் மகனுக்கு வாங்கிக் கொடுத்தார். தனது மகளின் கல்யாணத்தில் இராமரத்தன் சிங் கொடுத்த பரிசுப் பொருள்களைப் பார்க்கும் போது அவன் எதையோ எதிர்பார்த்துத்தான் அப்படிக் கொடுத்திருக்கிறான் என நினைத்தார். அவன் இவ்வளவு பரிசு கொடுக்கவேண்டிய அவசியமென்ன?. தான் அவனது நிறுவனத்தில் சேர்ந்தால் எங்கே அவனிடம் மாட்டிக்கொண்டு விடுவோமோ என்று பயந்தார். அது மட்டுமில்லை. அவருடைய மாப்பிள்ளை மேனேஜராகப் பணிபுரியும் அலுவலகத்தில் தான் ஆலோசகராக இருப்பதா என நினைத்தார். அவரது தன்மானம் உதைத்தது.

இவ்வாறு அவர் சிந்தனை செய்துகொண்டிருந்த போது அவரை ஒரு கல்யாண வேலைக்கு அழைக்க ஒருவர் வந்தார். கல்யாண வேலைக்குப் போவதுதான் சரி என்று முடிவெடுத்தார். அடுப்படி வெக்கையில்தான் தனது கனவு நனவாகும் என்று நினைத்தார்.

வந்த வேலையையெல்லாம் இழுத்துப் போட்டுக்கொண்டு செய்தார். அறுபது வயதாக இன்னும் ஒரு வருடமே இருக்கும் நிலையில் அவர் உடல் ஒத்துழைக்கவில்லை. அடிக்கடி அது மக்கர் செய்தது

எனவே உடல் மெலிந்தது. முன்புபோல சுறுசுறுப்பாக இயங்க முடியவில்லை.

வில்லியம்ஸ் ராமரத்தன்சிங் அவரது மனைவி, கோபால் ரமா என்று எல்லோருமே எவ்வளவு சொல்லியும் அவரது மனத்தை மாற்ற இயலவில்லை.

புகையிலைப் பழக்கம் இருந்த காரணத்தால் வாயில் புண் அதிகமாயிற்று. டாக்டர் பார்த்துவிட்டுப் புகையிலையை நிறுத்தாவிட்டால் அது கேன்சரில் கொண்டு விட்டுவிடும் என்று எச்சரித்தார்.
மருத்துவ மனையில் இருந்த சாம்பசிவத்தை வில்லியம்ஸ் சென்று பார்த்தார்.
“இதைப் பார்த்தீங்களா, நான் எழுதியுள்ள புத்தகம்”
மியூசிங்ஸ் அட் தி ஓவன்”
. அதுதான் அடுப்படி ராகங்கள் வந்திருக்கு. இதை உங்களுக்குத் தான் சமர்ப்பணம் செய்திருக்கிறேன்.” என்றார் வில்லியம்ஸ்.
“சாம்பசிவம் புத்தகத்தை வாங்கிப் பார்த்தார். மேலட்டை வழவழ என்று இருந்தது. பிரித்துப் பார்த்தார். உள்ளே அவரது புகைப்படம் அச்சிடப்பட்டிருந்தது. அதற்குக்கீழ் “டெடிகேட்டட் டு தி கிரேட் கேட்டரர் சாம்பசிவம்” என்று எழுதப்பட்டிருந்தது. சாம்பசிவத்தின் கண்களில் கண்ணீர் கசிந்தது.
“வில்லியம்ஸ், நீ சொன்னதை நிறைவேற்றிவிட்டாய். நான் தான், நான்தான்...“ விக்கி விக்கி அழத்தொடங்கினார்.
அவரை அந்தக் கோலத்தில் வில்லியம்ஸ் பார்த்ததில்லை.
“ப்ளீஸ் டோண்ட் வீப் அழாதீங்க. நீங்க நினைத்தது நடக்கும், நிச்சயம் நடக்கும்” என்றார் வில்லியம்ஸ்.
“இனிமேல் நான் ஜோலிக்குப் போக முடியுமா? ”
“முடியும். அடுப்படியிலே அனுபவங்களை மற்றவர்களுக்கும் கொடுக்கலாமே” உங்கள் அடுப்படி ராகங்களை மற்றவர்களும் பாடட்டுமே!”
“என்னப்பா, சொல்றே?”
நீங்க எழுதறதைப் பத்தித்தான் சொன்னேன்”
“எனக்கு முறையா எழுதத் தெரியாதே!”
“நீங்க சொல்லுங்க. அது போதும். மத்ததை நாங்க பாத்துக்கறோம்”
“நாங்க பாத்துக்கறோம். என்றால் நீயும் ராமரத்தன் சிங்குமா?”
“ஆமாம். “
ராமரத்தன் சிங் வேண்டாமப்பா. அவன் தன் வியாபாரத் துக்காக நம்மைப் பயன்படுத்தறானோன்னு தோணுது”

"நிச்சயமா இல்லை, என்னை நம்புங்க. நீங்க என்னை நம்புவது நிஜமானால் அவனையும் நம்பலாம்."
"அப்படியா?"
"பாருங்களேன். நீங்க ராமரத்தன் கம்பெனியிலே சேர்ந்ததுக்கப்பறம் என்னைப் பின்னானலே தள்ளிடலாம்"
"வில்லியம்ஸ். அப்படிச் சொல்லாதே. நீதான் என் முதல் மகன். போதுமா?"
"நீங்க கோபப்படாம இருந்தா உங்ககிட்டே ஒண்ணு சொல்லட்டுமா?"
"உன்னைப் பின்னாலெ தள்ளிடுவேன்னு மட்டும் சொல்லாதே. வேறு என்னவேணாலும் சொல்லிக்கோ. கோபப் படமாட்டேன்".
"அதுபோதும். நிச்சயமாக் கோபப்பட மாட்டேன்னு சொல்லுங்க."
"மாட்டேன்"
கொஞ்சங் கூட உணர்ச்சி வசப்படக் கூடாது"
"இது என்னப்பா பீடிகை பலமா இருக்கு. உணர்ச்சி வசப்படறதும் படாததும் நீ சொல்றதைப் பொறுத்து இருக்கு. "
"அப்ப நான் சொல்லலே"
"உணர்ச்சிவசப்படலே, படலே படலே. போதுமா?"
"பாருங்க இப்பவே உணர்ச்சி வசப்படறீங்க."
"இல்லே. படலே சொல்லு"
"எனக்குத் தெரிஞ்ச ஒருவர் பெரிய கள்ளக்கடத்தல்காரர்."
"என்ன, அவர்கள் கூட எல்லாமா சகவாசம் வச்சிருக்கே நீ"
"நிச்சயமா இல்லே. தெரிஞ்ச ஒருவர்னு தானே சொன்னேன். இப்போ மனந்திருந்தி சம்பாதித்ததையெல்லாம் நாட்டுக்கு நன்மைசெய்யச் செலவழிக்கணும்னு சொல்றார். அவரிடம் உங்கள் திட்டத்தைச் சொன்னேன். அவரும் படிக்க முடியாம ஏழையாய் இருந்ததனால்தான் கள்ளக் கடத்தல்காரரா மாறினாராம். அதனாலேதான் ஏழைகளுக்காகப் பள்ளிக்கூடம் கட்டப் பணம் தருவதாகச் சொல்கிறார்"
"வேண்டாம்பா கெட்ட வழியிலே வந்த காசு நமக்கு வேண்டாம்."
சரி, மனிதன்னா தவறு செய்வது இயற்கை தானே. தவறுகளே செய்யாத மனிதன் யாரேனும் உண்டா?"

“இல்லே”
“அவன் திருந்தினா அவனை மன்னிச்சு ஏத்துக்க வேண்டியதுதானே தருமம். அவனை மன்னிக்கவில்லை என்றால் அவன் மீண்டும் கெட்டுவிடுவானில்லையா?”
” ஆமாம். மன்னிக்கலாம்”
”ஆனா நீங்க மன்னிக்க மாட்டேங்கறீங்களே?”
“அவனை மன்னிக்கலாம்பா. ஆனால் கள்ளப்பணம் என்கிற பாவ மூட்டையை அவன் இன்னும் வச்சிருந்தா என்ன செய்யறது?.”
அதற்குப் பரிகாரம்தான் நல்ல காரியங்களுக்கு அதைச் செலவு செய்யறது” என்றார் வில்லியம்ஸ்.
“அத அரசாங்கத்திடம் ஏதாவது ஒரு நல்ல திட்டத்திற்குக் கொடுக்கச் சொல்லு”
” கொடுக்கலாம். ஆனால் இன்று நாடு இருக்கும் நிலையில் அரசியல் வாதிகளுடைய பைக்குத்தான் அதிலே பெரும் பகுதி போய்ச்சேரும். நீங்களும் நாட்டிலே ஒரு அங்கம்தானே! அந்தப் பணத்தை உங்க திட்டத்திற்குக் கொடுத்தால் நல்லதுதானே! அவனுக்கு ஒரு வாய்ப்புக் கொடுங்களேன்”
“வில்லியம்ஸ் எனக்கு ஏதாவது குழப்பம் வந்தா பாரதி கவிதைகள் புஸ்தகத்திலே கயிறு போட்டுப் பார்ப்பேன். எனக்குச் சரியான பதில் கிடைக்கும்.. அதோ வச்சிருக்கேன் பாரு அந்தப் புத்தகத்தை எடு. பாரதி என்ன சொல்றார்னு பார்க்கலாம்”
வில்லியம் பாரதி புத்தகத்தை எடுத்துக் கொடுத்தார். அதில் உள்ள சிறிய ரிப்பனைப் பாரதி புத்தகத்துக்குள் நுழைத்துத் திறந்தார். அவர் கலைமகள் துதியை அடிக்கடி எடுத்துப் படிப்பதால் அந்தப்பக்கமே வந்தது.
“வில்லியம் உனக்குத்தான் தமிழ் படிக்கத் தெரியுமே. உன் கண்ணில் என்ன படுகிறதோ அதைப் படி” என்றார்
“வில்லியம்ஸ் படித்தார்
“நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்,
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்” என்று
“போதும்பா. போதும் . பாரதி எனக்கு உத்தரவு கொடுத்துட்டான். நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்னு தானே சொல்றான். அது எப்படி வந்ததுன்னு பாத்து

வாங்குன்னு சொல்லலையே! அது போதும்.
திருமங்கையாழ்வார் கொள்ளையடித்துக் கோவில் கட்டலையா? . நான் ஆஸ்பத்திரியிலேருந்து வந்ததும் அவனைப்போய்ப் பார்க்கலாம்'' என்றார்
“அதற்கு அவசியமே இல்லை. அவரே இப்பொழுது வருவார்''
அப்பொழுது ராம்ரத்தன் சிங் உள்ளே வந்தான்.
வில்லியம்ஸ் அவனைப் பார்த்ததும் புன்னகைத்தார்.
ராமரத்னம் புரிந்துகொண்டான்.
'' வாப்பா, சௌக்கியாமாப்பா, உட்காரப்பா'' என்றார் சாம்பசிவம்.
“வார்த்தைக்கு வார்த்தை அப்பா போட்டுப் பேசறேளே. நான்தான் உங்களை அப்பா அப்பான்னு அழைக்கணும்'' என்றான் ராமரத்தன்சிங்.
“என்னப்பா சொல்றே?'' என்று ஆச்சர்யத்தோடு வினவினார் சாம்பசிவம்.
“ஆமாம்பா. நான்தான் உங்கள் மகன் ராமரத்னம்.''
படுக்கையிலிருந்து எழுந்து கொண்டே'' என்ன சொல்றே, உண்மையாகவா?, வில்லியம்ஸ் உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டார் சாம்பசிவம். வில்லியம்ஸ் புன்னகைத்துக் கொண்டே தலையை ஆட்டினார்.
“அப்பா, நான்தாம்பா அந்தக் கள்ளக்கடத்தல் காரன்''
“என்னடா இப்படிப் பண்ணிப்புட்டே''''என்று சொல்லி ராமரத்தனைக் கட்டிக்கொண்டு சாம்பசிவம் அழுதார். அழுகைக்கிடையே சிரித்தார்.
“என்னை மன்னிச்சுடுங்கப்பா''
“என்னாலே உன்னைப் படிக்க வைக்க முடியலே. அதுக்காக ஓடிப்போகறதா, கடனோ ஒடனோ வாங்கிப் படிக்க வச்சிருக்க மாட்டேனா?''
“தப்புத்தானப்பா. ஓடிப்போனதும் பஞ்சாபிலே ஒரு கள்ளக் கடத்தல் கும்பலிடம் மாட்டிக்கொண்டேன். வேறு வழியில்லை. நிறையச் சம்பாதித்தேன். எனக்கும் மதுவந்திக்கும் காதல் ஏற்பட்டது. அவளுடைய அப்பா பெரிய தேசீய வாதி. சுதந்திரப் போரட்டத்திலே ஜெயிலுக்குப் போனவர். சர்தார் ஸ்வரண்சிங்கிற்குச் சொந்தக்காரர்.. அவர் என்னை அந்தக் கள்ளக் கடத்தல்

கும்பலிலிருந்து வெளியேத்தினார். பொண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்தார். என் கள்ளப் பணத்தையெல்லாம் டிக்ளேர் பண்ணச் சொல்லி அதுக்கு உரிய வரி செலுத்த வச்சார். இப்போ எங்கிட்டே இருப்பதெல்லாம் வெள்ளைப் பணம்தான்..அவருக்கு மது வந்தி ஒரே பொண்ணு. பெருஞ்சொத்து. எல்லாம் எங்களுக்குத்தான். . உங்க பள்ளிக்கூடத்துக்கு நான் கொடுக்கப் போகிற பணம் உங்கள் மகன் பணம், இல்லை . உங்க பணம்தான்" என்றான் ராமரத்தன்.

சாம்பசிவத்தின் காலைத் தொட்டுக் கண்ணில் ஒத்திக் கொண்டான்.

"ராமா, நீ என் பையந்தான்னு ஏண்டா முதலிலேயே சொல்லலே"

"உங்க உடம்பு தெம்பா இருக்கிற நேரத்திலே சொல்லியிருந்தா, நெருப்பிலே வெந்து சம்பாதிச்சாலும் சம்பாதிப்பேனே தவிர உன் பணம் வேண்டாம்னு சொல்லிடுவேளோன்னு பயந்தேன். நல்ல வேளையா வில்லியம்ஸ் உங்ககிட்டே பக்குவமா எடுத்துச் சொன்னார்"

"ஆமாம்பா. வில்லியம்ஸ் எவ்வளவோ செய்திருக்கான். இந்தப் படுக்கை என்னைத் தளர வச்சுடுத்து. ஒருவேளை பக்குவப்படுத்திடுத்தோ என்னவோ? தவறு செய்பவன் திருந்தினா மன்னிக்கணும். அதுதான் நல்லது. வில்லியம்ஸ் உனக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரியவில்லை. ராமா, இனிமேல் நான் அடுப்படி வேலைக்குப் போக மாட்டேன். உன் கம்பெனி என் கம்பெனி. வில்லியம்ஸ் சொன்ன மாதிரி எழுதறேன். இப்போத்தான் கொஞ்சம் கொஞ்சமா டிவி சேனல்ஸ்ச் எல்லாம் வர ஆரம்பிச்சிருக்கு. அதிலே மக்களுக்கு உபயோகமா நிகழ்சி நடத்தலாம். நான் எல்லோருக்கும் பயன்படற மாதிரி எழுதறேன்" டே இந்தச் சந்தோஷ சமாச்சாரத்தை அம்மாட்டே சொல்லணும்டா"

"அவாளுக்கெல்லாம் ஏற்கனவே சொல்லியாச்சு. "

"டே என் மாட்டுப்பொண்ணைப் பாக்கணுண்டா"

"மாட்டுப்பொணு மட்டுமில்லேப்பா. உங்க பேரனையும் பாக்கலாம். இதோ கூப்பிடறேன்"

இராமரத்னம் வெளியே சென்று அவர்களை அழைத்து வந்தான்

“”ஆவோ, ஆவோ, பக்கத்திலே ஆவோ” என்றார் சாம்பசிவம். மதுவந்தி அவருடைய காலைத் தொட்டு வணங்கினாள்.
“நன்னாயிரு, நன்னாயிரு “என்று அவள் தலையில் கைவைத்து வாழ்த்தினார்.. பேரனைப் பக்கத்தில் இருத்தி வைத்துக்கொண்டார். வில்லியம்ஸ் சற்றுப் பின்னால் போனார்
“வில்லியம்ஸ் நான் உன்னைப் பீன்னாலே போகச்சொல்லலே. முன்னாலே வந்து நில்லு” என்றார்
“ராமா, நான் நன்னாயிட்டேன். என்னை ஆத்துக்குக் கூட்டிக்கொண்டு போ.” என்றார்
“ராமா, இனிமேல் கோபால் உன் கம்பெனியிலே வேலை செய்யக்கூடாது”
“ஏம்பா”
“ஆமாண்டா சொந்தக்காரன்டே வேலை செய்யக்கூடாது. வில்லியம்ஸுக்கும் அவனுக்கும் நல்ல பொருத்தம். இனி அவன்கிட்டேயெ அவன் வேலை செய்யட்டும்” என்றார் சாம்பசிவம்.
“நான் அவனுக்குன்னு தனியா ஒரு கம்பெனி ஏற்பாடு செய்து கொடுக்கிறேன்பா. நீங்க சொல்ற மாதிரி மாப்பிள்ளை நம்மட்ட வேலை செய்யவேண்டாம்”
“டாக்டரிடம் சொல்லிவிட்டு அவரை வீட்டுக்கு அழைத்துச் சென்றார்கள். காரில் போகிற போது
“ராமா, இனிமே இந்தப் புகையிலைச் சனியனைத் தொடவே மாட்டேன். பாரதியாரும் அப்படித்தான் எழுதியிருக்கார். ஆனால் அவராலே நிறுத்த முடியலே. என்னால் முடியும்” என்றார் சாம்பசிவம்.
வீட்டில் ஒரே கொண்டாட்டம். தேன்நிலவு முடிந்து ரமாவும் கோபாலும் வந்திருந்தனர்.
“அப்பா, அம்மாவைப் பாருங்கப்பா. ஒரு சுத்துப் பருத்திட்டா?” என்றாள் ரமா.
“பின்னே எனக்கு மகன், மாட்டுப்பொண், பேரன் எல்லோரும் கிடைச்சுட்டாளே!” என்றாள் மாமி.
“மாமி இனிமேல் நீங்கள் பஞ்சாபி கற்றுக் கொள்ள வேண்டும்” என்றார் வில்லியம்ஸ்.
“நஹி, நஹி, மைம் தமில் சீக்கூங்கி” என்றாள் மதுவந்தி

“யாருக்கடா சீக்கு?” என்று கேட்டாள் மாமி
“சீக்கு இல்லே அம்மா. மன்னி தமிழ் கத்துக்கறேன்னு சொல்றா” என்றாள் ரமா.
“வில்லியம்ஸ். நான்கு நாள் நான் சரியா தூங்கலே. இப்போ சந்தோஷமா தூங்கப் போறேன். “என்று சொல்லிக்கொண்டே சோபாவில் படுத்துக் கொண்டார் சாம்பசிவம்.
“தூக்கத்தில் கனவு கண்டார். கனவில் அவரது பள்ளிக்கூடம் வந்தது. கட்டட முகப்பில் “பாரதி உயர்நிலைப்பள்ளி” என்ற பெயர்ப்பலகை தெரிந்தது. மாணவ மாணவியர் வயிறாரச் சாப்பிட்டனர். ஜாதி மத வித்தியாசமில்லாமல் எல்லோரும் பழகினார்கள். சாம்பசிவம் அடுப்படியில் சமையல் செய்துகொண்டிருந்தார். அவருடைய முகத்தில் புன்னகை மிளிர்ந்தது. வேர்வையை துடைத்து விட்டுக்கொண்டார்” சாம்பசிவம் நன்றாகக் கனவு காணட்டும். இந்தத் திருநாட்டில் நல்லவர்கள் அல்லது நல்லவர்களாகி விட்டவர்கள் தமது கனவை நனவாக்க எத்தனை அரசியல் வாதிகளின் கைகளில் கனம் சேர்க்கவேண்டுமோ?
சமூக அநீதி என்று ஒரு கூட்டம் குரல் கொடுக்கலாம். அரசுச் சட்டப்படி இட ஒதுக்கீடு செய்யவேண்டும் என்று இன்னொரு கூட்டம் குரல் கொடுக்கலாம்..
மைனாரிட்டிகளுக்குத்தான் இந்தச் சலுகை. சாம்பசிவன் ஒரு பாப்பான். பெரும்பான்மை. அனுமதிக்க முடியாது என்று மறுப்புத் தெரிவிக்கலாம். சலுகை என்று வரும் போது 3 சதவிகிதம் என்று ஒதுக்கும் கூட்டம்  பள்ளியை அனுமதிக்கப் பெரும்பான்மை என்று ஒதுக்கலாம். ஆனால் நம் தாய்த்திருநாட்டில் எல்லாவற்றையும் சீர் செய்ய ஒரு ஆயுதம் இருக்கிறது.
அதைச் சாம்பசிவம் பயன்படுத்த மாட்டார். என்ன நடக்கிறதென்று பார்க்கலாம்.
அதுவரை சாம்பசிவம் கனவை, கனவில் நனவாக்கிக் கொள்ளட்டும்!

----------------

